ஓம்.

**ராமகிருஷ்ண**

**விவேகானந்தர் சங்கம்**

காரைக்குடி

---

நன்கொடையாளர் ...ஸ்ரீ...திரு.நா.வு.க்ராசு...

ஊர் ......

புத்தக எண்...இ.34. பதிவு எண்...இ.-34

69

உ

சிவமயம்.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

சிவகங்கைச் சம்ஸ்தானத்தைச் சேர்ந்த

# சோழபுரபுராணம்.

இது

ஒக்கூர், திருவாளர் சி. கரு. சி. கரு. வெள்ளையப்பசெட்டியார்
என்று பெயர் விளங்கிய கருப்பஞ்செட்டியார் அவர்கள்
குமாரரும் ஷை திருக்கோயிற் றிருப்பணிபூஜாதிய
சிவதருமங்கள் நடத்தி வருகின்றவருமான

திருவாளர், சி. கரு. சி. கரு.

ஆதப்பசெட்டியார் அவர்கள்

கேட்டுக்கொண்டபடி

ஸ்ரீவன்றெண்டரவர்கள் மாணாக்கரும் சித்தாந்தச் செல்வருமான

காரைக்குடி, ராம. சோ.

சொக்கலிங்கச்செட்டியார் அவர்களாற்

செய்யப்பெற்று,

ஷை ஆதப்பசெட்டியார் அவர்களால்

சிதம்பரம்

ஸ்ரீ குஞ்சிதசரண அச்சுக்கூடத்திற்

அச்சிடப்பெற்றது.

சுக்கில ஞு பங்குனிமீ ௩௦௨

எட்டுத்திசைகளுட் சிறந்த ஈசானதிசையிலுள்ளது சோழபு ரமாதலால்இது, எவற்றினும் மேலாயதென்பதுவிளக்கமாம்.

இப்பெருஞ்சிறப்பு வாய்ந்த சோழபுரத்தில், அனவரத சாந்நித்தியாய் வீற்றிருந்தருளுகின்ற அறம்வளர்த்தநாயகி யம்பா அபூர்வவாகீசப்பெருமான் திருவடிகளிற் பேரன்புபூ ண்டு அதனால் ஆசுரிமையனுமதியுடன் திருக்கோயிற்றிருப் பணிகள் சிறப்பச்செய்து, நித்தியநைமித்திகாதிபூசனைகளும் விசேடமாக நடத்திவருகின்றவரும், இத்தலத்தின் வடக்கில் இரண்டுகடிகை தூரத்திலுள்ள ஒக்கூர் மகுடதனவைசியரில் சிந்தாமணிச்செட்டியாருடைய குமாரர்கள் நால்வரில் சேஷ்ட குமாரரும், கரும்புபோலும் இனிமையேசெய்புமியல்பின ரென்பது விளக்கும் கருப்பஞ்செட்டியா ரென்னும் பேரின ருமாகிய வெள்ளையப்பசெட்டியாரவர்கள், இத்தலபுராணத் தை வெளியிடக்கருதி, கோயிலூர் வீரப்பசுவாமிகளிடந்தெ ரிவிப்ப, அவர்கள் பாலசுப்பிரமணியஅய்யரிடம் தெரிவிப்ப, அவர் அவ்வாறு பாடத்தொடங்கி, பாடல்கள் அநாவசிய மாய் விரியப்பாடிக்கொடுத்தனர். அத்திருப்பணிச்செல்வர் அதனை நோக்கிப் பிறரிடமுங்காட்டிப்பொருந்தாமை தெரிந் தமையால், அதனைத் திருத்தியாவதுவேறு செய்வித்தாவது அச்சிட்டு உபயோகிக்கக் கருதித்தமது புத்திரர்களுக்குந்தெ ரிவித்தனர். சுமார் இருபதுவருடங்களுக்கு மேலாயது. சின் னாண்முன்னர், அத்திருப்பணிச்செல்வருக்குச் சொந்தமைத்

துனரும், சைவசித்தாந்தசன்மார்க்கமேநன்மார்க்கமெனுமுண்மை நன்குதெளிந்து அசைவற நிலைபெற்ற நிச்சயஞானசீலரும், அத்திடபத்திவிசேடத்தால் திருவிடைமருதூரென்னுந் திவ்வியக்ஷேத்திரத்தில் சித்தாந்தசைவச்செந்நெறிவிளக்கும் செந் தமிழ்வேதமாகிய தேவாரதிருவாசகாதி சிரவணநியம பாடசாலை தாபித்துச்சிறப்ப நடத்திவருகின்றவரும், எனக்கும் அத்தியந்தஆப்தருமாகிய நாட்டரசன்கோட்டை கனா. க. லெ. இலக்குமணச்செட்டியாரவர்கள் என்னிடத்துள்ள அன்பின்மிகுதியால்என்னை அழைத்துக்கொண்டு சோழபுரத்துவந்து அப்புராணத்தைப்பார்க்கச்செய்தார்கள். பார்க்குங்கால்முதலில் மங்கலச்சொல்லூருதொழிந்ததுமன்றிக், கருஞ்சோலைஎன்று அமங்கலச்சொல்லால்தொடங்கப்பட்டிருந்தது, துதிச்செய்யுள்களில் தற்புகழ்ச்சியே மிக்கிருந்தது. அபசெயப்படலம் கொடுங்கோற்படலமென்பனவாகிய அவப்பெயர்களும், திருச்சிராப்பள்ளியில்ஒருகாலத்து மண்மாரிபெய்ததென்று அநாவசியமாகஎடுத்துக்காட்டியஅவச்செயல்களும், மற்றும் வேண்டாதவைகளும் மிகுந்துகிடந்தன. ஷை திருப்பணிச்செல்வர் இதனை நீக்கிச்சுபகரமாகச் செய்விக்கக்கருதியவாறே, அவர்குமாரர் மூவரில்நடுநிலையராகியஆதப்பநாமத்தன்புவள்ர்செல்வர், அடியேனிடத்துள்ள அன்புமிகுதியால், அவ்வாறுசெய்துதரும்படி வற்புறுத்தினர். அதற்குரியஅறிவாற்றலில்லாதிருந்தும், அச்சொன்மறுக்கமாட்டாது, திருவ

ருளே அவாய்புக்கிரங்கி நிறைவேற்றி வைக்குமெனத்துணிந்து, அத்திருவருளையே வேண்டி நின்று மங்கலமொழியாற்றொடங்கிச், சாஸ்வதநிர்த்தத்திருவன்மையும், இத்தலத்தின் பேர் முன்பு விசயபுரமென்று வழங்கியதும், பின்புசோழபுரமென்றுவழங்குவதும், காரணமுமாகிய இவ்வளவில்வடமொழிவிளக்குதல் மாத்திரமே, அவற்றிற்கு ஏற்புடைத்தாயவிஷயங்கள் விரித்து, சைவநலங்கள் விளக்கித்தேவாரதிருவாசகாதியசெந்தமிழ்வேதமந்திர வாக்கியமான்பொருள்கள் உயிர்போலமையவைத்துப் பாடத்தொடங்கினேன். திருவருள்நிறைவேற்றியது. இப்புராணம், சுக்கில௵ ஐப்பசி௴ ௩௰உ சுக்கிரவாரசுபதினத்தில் அறம்வளர்த்தநாயகி அம்பாசமேத அபூர்வவாகிசப்பெருமான் திருச்சந்நிதியில், ஆதப்பநாமஅருட்பணிச்செல்வர் ஆதரவால் அபிஷேக நைவேத்தியாராதன அலங்காரவரிசைகள் பெருக அறிஞர்குழாஞ்சூழ அரங்கேற்றமாகியது. அனைவரும் அம்மையப்பர் இடபாரூடஅருட்கோலக்காட்சியும்பெற்று ஆனந்த மடைந்தார்கள். இப்புராணத்தைச் செய்வித்தவர்விரைவுக்குறிப்புநோக்கி, சிலநாட்களுட்செய்து முடித்தமையாலும், விரிவிலாவறிவினேனாதலாலும், இப்புராணத்துள்ள வழுக்களைத் திருத்திவழாநிலைதெரித்தருளும்படி விரியறிவு வாய்ந்து விமலனருள்பெற்றுயர்ந்தமெய்யன்பர் திருவடிகளைப் பணித்துப்பிரார்த்திக்கின்றேன்.

ராம. சேச.

உ

# சிறப்புப்பாயிரம்.

இந்நூலாசிரியர்மாணாக்கர் காரைக்குடி நா. முரு.

முருகப்பசெட்டியாரவர்கள் இயற்றியது.

நிலைமண்டில ஆசிரியப்பா.

உலகெலா மோர்ந்தணைந் துய்கெனுங் கருணையால்
பொன்மலி கமலப் பூந்தட மேற்றிசை
வின்மலி சித்தி விநாயகன் செவ்வேள்
எனுமிரு குமரர்க ளிலங்குற நாப்பட்
கோயில்கொண் டருளுமெண் குணப்பெருஞ் செல்வி
தாயா யுலகெலாம் தந்தருள் கன்னிகை
மும்முலைத் தடாதகை முதல்விமீ னாட்சி
யம்மையெவ் வுலகும்போற் றரசியாய் வீற்றிருந்
தாளுநன் மதுரை யாலவாய்த் தளியின்முன்
முளைத்தொளிர் சொக்கலிங் கேசனு முன்னையோன்
அன்பருக் கருளவீ சானமா திரத்தவிர்
சோழ புரமெனுந் தொல்பதி யின்கண்
அறம்வளர்த் தவளுட னபூர்வவா கீசுரன்
எனும்பெயர் தரித்துவீற் றிருந்தருள் புரிவதும்

வாணி போற்றி வாக்குறப் பெற்றதும்
பார்த்தன் சோழன் பணிந்துபே றுற்றதும்
நார்த்தசிந் தையர்பலர் நலம்பல சார்ந்ததும்
நன்றுணர்ந் தீண்டுறீஇ நல்லருள் பெறுவான்
மன்றவக் கோயில் வளர்திருப் பணியெலாம்
மிக்கூ ரன்பின் விதிமுறை புரிந்துவாழ்
ஒக்கூர் வாச னுத்தம சீலன்
வரப்பொற் கூடா மணிபுரப் பட்டஞ்சார்
இருப்பைக் குடிக்கோ யிற்காணி யாளன்
சிந்தா மணிப்பெயர்ச் செல்வன்மிக் குகந்த
மைந்தரின் முன்னையோன் மாசின்மை தேற்றும்
அன்புறு வெள்ளை யப்ப நாமவேள்
பொன்பொலி சோழ புரமான் மியஞ்செந்
தமிழ்மொழி யினுந்திகழ் தாவிழைஇ முன்னோர்
தமிழ்புகல் கவிஞர்பாற் சாற்றியாங் கவர்தரு
கவிகளிற் றன்னுளங் கவிபுறு மையினால்
அவிருமெய் யன்பார்ந் தருள்பெறீஇ வாழும்
சிலரே யிந்நூல் செயற்குரி யாரெனச்
சாலவுந் துணிந்துதன் றனையர்க் கிசைத்தனன்
வயங்குமத் தனையர்மூ வரினடு நிலையனும்
நயங்குலா மாதப்ப நாமவே ளறிஞர்கள்
தம்மிப் றன்குலத் தாரிற் றகுதிசால்

செம்மல் யாரெனத் தெளிந்துளந் துணிந்து
காரைக் குடியெனும் பேர்திகழ் நகரில்வாழ்
சீரைப் படைத்த செட்டிமார் தம்முட்
கற்றவர் காமுறுங் கற்புமிக் குடையான்
நற்றவர் பேணு நன்னெறிச் சீலன்
வன்றொண்டர் பாங்குறீஇ வண்டமிழ் தேர்ந்துளான்
நன்றுண்டர் புராணநூ னயம்விரித் துரைப்போன்
வைதிக சைவ வாநெறி வாய்மையன்
கைதவ மில்லான் கனிமொழி யாளன்
பதிபசு பாசப் பகுதிமுன் னூவன
விதிமுறை மயக்கற விளக்குமெய் கண்டநூல்
சிவாகம நெறிச்சிவ தீக்கைபெற் றுண்மைதேர்ந்
தவாவுமெய் யன்பருக் கவிர்தா வுணர்த்துவோன்
பவமிரித் தருடரும் பாசிவ பூசனைத்
தவமிளம் பருவத்தே சார்ந்துளான் சைவ
மிகுமாண் புலகெலாம் விரித்தரு ளாறு
முகநா வலர்கோன் முளரியந் தாள்பணிந்
தாற்றுமெய்த் தொண்டுபல் லாண்டுசெய் தருளுறும்
பேற்றினப் பூசனைப் பெருந்தவ முறையினிவ்
வெழுபா னன்காண் டின்மேலுந் தளர்வற
வழுவா தியற்றி வருசிவப் பொலிவினன்
நிறைசெம் மேனிவெண் ணீற்றரற் போற்றியம்

முறைதன் சேயுடன் முழுதுநீ றணியினன்
அருட்கண் மணிபுனைந் தைந்தெழுத் தருண்முறைப்
பொருட்கிசை தாத்தினம் பூண்டொளிர் சிந்தையன்
என்போல் வாரையு மினிதணைத் தின்சொலால்
தன்பாற் கற்றுணர் தருநிலை தந்தோன்
வேண்டல்வேண் டாமை விடுத்தொளிர் குணத்தோன்
தாண்டவன் றிருமுன் சார்ந்துநா டொறும்பராய்
ஆண்டவன் றில்லையி லருளுமெய் கண்டசித்
தாந்த வித்தியா சாலைதா பனம்புரீஇ
நாடொறும் பெருக நடாத்தும் பெரியோன்
இளைசை மருதங்கூ ரிருதளிக் காணியும்
ஒளிர்திரு வேட்பூ ருடையவென் பட்டமும்
வழுதிநாட் டரசரான் மன்னிவாழ் மகுட
தனவை சியர்குலந் தழைத்திட ராம
நாத னருந்தவ நலத்தின்வந் தருள்சேய்
ஓறுமின் னனபல வுயர்தரு நிலையெலாம்
சேர்தரு சொக்க லிங்கதே சிகன்பால்
எர்தரு தன்றந்தை யெண்ணிபாங் கெய்துவான்
பொற்புறு சோழ புரமான் மியந்தமி
ழிற்புகன் றருள்கென விசைத்தன னதுவினைப்
எம்மான் றிருப்புக ழெடுத்துரை திருப்பணி
அம்மா கிடைத்ததென் றகமிக மகிழ்வுறீஇ

பெயல்காண் சிகியெனப் பிறங்கு முளத்தனுய்
சிந்துர முகற்பாய்த் திருத்தகு சோழ
புரபுர னஞ்சொற் பொருட்சுவை யாதிய
வானிறை தமிழின் வயக்கின னதனைப்
பன்னகர் வானவர் பாருளோர் யாரும்போற்
றின்னதெம் பிரானரு ளேயென மேற்கொண்
டுன்னிமுன் வேட்ட வுதார குணத்தனும்
ஆதப்ப நாமத் தரும்பெறற் செல்வன்
மாதகு சாலி வாகன சகாத்தம்
ஆயிரத் தெண்ணூற் றைம்பத் திரண்டிற்செல்
சுக்கில வைப்பசிச் சுக்கிர வாரத்
தறம்வளர்த் தருளனை யபூர்வவா சிசர்பூ
சனைநனி சிறப்பத் தந்தனி வகையெலாம்
திகழ்த்திமெய் யன்பர்கள் செறிந்துசூழ்ந் தின்புறச்
சாற்றுமப் பரசிவ சந்நிதி தன்னிலத்
தேற்றுசீர்ப் புராணத் திருமுறை சிவனெனப்
போற்றியப் பூசகர் பூசித் துதவநேர்
இறைஞ்சியந் நூலா சிரியரேற் றரும்பொருட்
டிறந்திரு வருணிலை தெளிவுற விளக்கி
இனிதுரை வாய்மையோர்க் கின்புறீஇ யிவ்வணம்
நனிசிறப் பிலங்குற நாடொறு நடாத்தி
யணியகார்த் திகைமதி யவிர்குரு வாரத்தில்

கணிசெயப் புராண கவிநிறை வுறவநாள்
மிகுசிறப் பியற்றி விடையிவர்ந் தெம்பிரான்
தருதிருக் காட்சி தருதிரு விழாப்புரீஇ
அத்திருப் புராணமவ் வாசிரி யன்றா
மெய்த்தகு மன்பொடு விமலனு ருளெனும்
கருத்தினேற் றச்சுவா கனத்தியைத் துய்த்தனன்
ஒருத்திதன் னருளினு லுலகெலா முய்யவே.

---

இந்நூலாசிரியர் மாணுக்கர் காரைக்குடி ராம. உ.

இராமசாமிசெட்டியார் அவர்கள் இயற்றியது.

நேரிசையாசிரியப்பா.

திருவருள் விலாசத் தொருதனிச் சொரூப
சிவமுயிர் வகைக ளவநெறி யொருவிப்
பவந்தெறற் குரியமெய்த் தவங்களுல் வகைநூன்
முறைபுரி நிலையின நிறைதிருக் கோயில்கள்
ஆதலின் விரியுநீர்த் தாயதன் கிருதமே
சீதள கடினமாய்த் திரண்டுறு நிலைபோல்
உருவ மருவ முருவரு வெலாங்கடந்
தருள்வியா பகநில விரவுதா னேயவ்
வுருவரு வாதியா யொளிர்திரு வருண்மய
தடத்தமா மேனிகொண் டடுத்துவிற் றிருந்தருள்

திருத்தல மளப்பில திகழுமிப் புவனியில்
ஈண்டுநா டெவற்றுமிக் கிலங்குதொன் மைத்தெனல்
பாண்டிநா டேபழம் பதியென மணிவா
சகவருட் சுருதியுஞ் சாற்றுசீர்ப் பாண்டியில்
உந்துசி ராடல்செய் துலகருள் சோம
சுந்தர னுமைசேய் துன்னுவண் சோமாக்
கந்தரெவ் வுலகமுங் கருணைச்செங் கோல்செலச்
சதுரைமே வரசுசெய் மதுரையி சான
மாதிரத் திலங்கலின் மன்னுமெத் தலங்களும்
போற்றுசீர்ச் சோழ புரத்துவீற் றிருந்தருள்
அறம்வளர்த் துலகெலா மளித்தரு ளன்னையை
இறைமைதேற் றிதழிவா கீசனை யாசிரி
காணமுன் றெருருப்படக் கனிந்தபே ரன்பினச்
சரணமே சரணெனச் சார்ந்திறைஞ் சியல்பினன்
பரம்பரை யாயப் பரன் திருக்கோயிலின்
நிரம்புசீர்த் திருப்பணி நிகழ்த்தியே மேன்மேல்
நிறைபெருஞ் செல்வ நிலையின்வாழ் வள்ளல்
அறமலி யொக்கூ ராதப்ப நாமவேள்
இனியவான் மார்த்தமீ தேயெனப் போற்றுமிப்
புனிதவண் சோழ புரமாண் புணர்த்தும்
வடமொழி யினையருள் வாய்ந்தொளி ரினியமெய்த்
தடமொழி யாயசெந் தமிழிற்றந் தருள்கென

அற்புமி ஞாவேண் டாதரநோக் கிப்
பொற்புறு சொற்சுவை பொருட்சுவை யருட்சுவை
சைவசித் தாந்தத் தகுசுவை மிகுசிவ
தெய்வபத் திமைச்சுவை சிவமணங் கமழ்சுவை
ஆகிய பற்பல வற்புதச் சுவையெலாம்
மேதகு காதலின் விரவவைத் தளித்தனன்
திருநகர்க் குரியபஃ றிறப்பெரு வளமெலாம்
மருவுசீர்க் காரை மாநகர் யாமணி
தெய்வவெண் ணீறுந் திருக்கண் மணியும்
உய்வருண் மெனத்தெரிந் தொளிர்செம் மேனியன்
தளர்வறு சைவநற் றண்பயிர் மேன்மேல்
வளரவாக் கமுத மழைபொழி மாமுகில்
மந்தருந் தேர்ந்துயும் வகையுவ மாதிய
தந்தெளி துளங்கொளச் சாற்றுநா றேற்றுவோன்
பொருவில்சீர்த் தொண்டர் புராணு நியசிவ
மருவுநா லாழ்பொருள் வாய்மை வயக்குவோன்
பன்னெடுங் காலம் பரசிவ பூசனை
முன்னருஞ் சிவபணி முழுதுமேற் கொண்டுளான்
சிவபாத் துவகிலை திகழ்த்துபல் புராணங்கள்
அவிர்யம கந்திரி பாதியந் தாதிகள்
பற்பல சிலேடைகள் பானரு ளிலைவிளக்

கற்புத நால்வரிள் ஊத்தமி மூறிகள்
நூற்றிநு மேற்ஞெருகை நவஙுநன் னூல்கள்
சாற்றியு மேஙுந் தருதிரு வாக்கினன்
புலிபதஞ் சலியிரு புடைமகிழ்ந் தேத்த
உலகரு ளணையணித் தூடனின் றியக்கப்
பரனரு ணடம்புரி வரனிறை தில்லையின்
விரவுமெய் கண்டசித் தாந்த வித்தியா
சாலைதா பித்தருள் சார்தா நடத்துவோன்
நிலமு மலையு நிறைதரு கோஙும்
மலரு நிகர்சீர் வாய்மையின் வாய்ந்தோன்
எங்குரு நாத னினியபே ரருளால்
அங்கணூ லெனக்கு மளிக்குமா தரத்தினன்
மலர்திரு முகமும் வளர்சிவப் பொலிவும்
கலைநிறை யுணர்வுங் கனியுமன் புளமும்
தூய்மையும் வாய்மையுந் துகளறு மின்சொஙும்
தாய்மையு மாதிய தண்குணம் வாய்ந்தோன்
தக்கவர் போற்றுசீர் சார்ந்த
சொக்கலிங் கப்பெயர்ச் சுகுணதே சிகனே.

---

நாட்டரசன்கோட்டை நா. கரு. நா.

## நாராயணச்செட்டியாரவர்களியற்றியது.

பொன்செயு மேனி யபூர்வவா கிசர் புரிபறம் வளர்த்தரு ளன்னை, மன்செயுஞ் சோழ புரநலன் வடநூல் வழித்தமிழ் தருகென வனைய, பொன்செயுங் கோயிற் றிருப்பணி யாதி பொற்புற வியற்றுசாந் தான, மன்செய்பே ரன்பி னுதப்ப நாம வள்ளல்வேட் டுரைத்தனன் மன்னோ.

உரையது வினவு சைவசித் தாந்த வுண்மைதேர் தவ நெறிச் செல்வன், சுரர்களும் வழுத்து காரைமா நகர்வாழ் சொக்கலிங் கப்பெயர்த் தூயன், வரநிறை கல்வி வள்ளல்கா வியமா வழங்கின னதுபுவிக் கனியாய்த், தெருளுறு புலவர் செவிக்கமு தாகிச் சிறந்தது நீடுவா ழியவே.

---

உ

சிவமயம்.

# சோழபுர புராணம்.



## காப்பு.

திருவருள் வேதத் தாயாய்த் திகழ்ந்தொளிர் பிரண வச்சீ
ருருவனு யுலகெ லாஞ்செய் யுறுபணி நிறைவு வாய்ப்ப
வருள்புரிந் தியக்கு மாதங் கானன வைங்கை முக்கண்
மருமல ரிதழி வேணி வரதனை வழுத்தி வாழ்வாம். (க)

## தென்னன்றேவி விநாயகர் துதி.

பொன்னுந் தேசந் திகழ்மணியும்
பூந்து ழாயும் புனைமார்பன்
முன்னந் தேடற் கரியபத
முளரி வாகீ சுரரென்றும்
மன்னுஞ் சோழ புரத்தமர்ந்து
வரம்வேட் டனமுற் றினிதருளுந்
தென்னன் றேவி விநாயகன்றாள்
சென்னி மேற்கொண் டுன்னுதுமே (உ)

## வாழ்த்து.

வேதவா கமங்கள் வாழ்க
 வேள்விமா மறைகள் வாழ்க
சீதநா னியங்கள் வாழ்க
 சிவரின் புற்று வாழ்க
நீதி*நாற் றெண்டு வாழ்க
 நீறுகண் மணிமுன் வாழ்க
போதமெய்த் தொண்டர் வாழ்க
 புரவலன் செங்கோல் வாழ்க. (௩)

* நாற்றெண்டு—சரியை கிரியை யோக ஞானத்தொண்டுகள்.

## நூற்பயன்.

மன்னுபுகழ்ச் சோழபுர மான்மியமெய்
 யன்பினொடு மாயி னோர்வான்
பன்னுவார்கேட் குநரெழுதும் பண்பினர்க
 ளாயுள்பொருள் பல்க வாழ்ந்து
பொன்னெனுழினற் குணமனைவி நன்மக்க
 ளாதியெலாம் பொலிய விம்மை
யின்னலமுற் றூர்ந்தமல னிணையடியி
 னணையின்பு மெய்தி வாழ்வார் (௪)

## அபூர்வ வாகீச சிவஸ்துதி.

வேதசம யங்கள்பிற சோபான மாய்க்கீழ்மே
 வியமே னிற்குஞ்
சிதசம யஞ்சைவ மெனுமெய்ம்மை பிறமூர்த்தி
 சேரா மானி
கேதனமு யாவருஞ்சூழ் தந்தளியும் விளக்குறமேற்
 கெழுவுஞ் சார்வ
போதவிபா பகமுணர்த்த பூருவவா கீசூர்தாள்
 போற்றி வாழ்வாம். (ரு)

வேதத்துள்ள புறச்சமயங்களெல்லாமும் தனக்குக் கீழ்ப் படி வரிசைகளாய் மேவும்படி தழுவிக்கொண்டு, அவற்றின்மேல் தனியாசாய் நிற்கும் சமயம் சைவமே என்னு மெய்ம்மையை, அவ்வைஷ்ணவ சமயமூர்த்திகளன்றி மற்றை மூர்த்திகளொன்றுஞ் சோராத (மால்நிகேதனமும்) விஷ்ணுகோயிலும், அரிபிரமேந்திராதி சமஸ்த தேவதைகளும் தமக்குப் பரிவாரமாகச் சூழ்கின்ற தமது கோயிலும் விளக்க, இதனாலும் மேலாய் விளங்கும் தமது சர்வஞ்ஞ சர்வவியாபக பாதத்துவநிலை தெரிவித்தருளும் அபூர்வவாகீசரென்க.

பலபிறவி களின்மனைவி யரைத்தழுவி
 மைந்தர்களைப் பயந்த மாயன்
செலவரிய பதத்தானைக் குடிலைதுதற்
 கண்முதனற் சேயர்த் தந்தெய்

வுலகுமசு ராதிபய மொழிந்துய்வான்
புரிந்தருளு மொருவன் றன்னை
மலர்பொழில்சூழ் சோழபுர வாகீசப்
பெருமானை வணங்கி வாழ்வாம். (சு)

விஷ்ணு பிரமாதி தேவர் யாவரும் காமாதி அசுத்த குணத்தராய் மாயா சரீரிகளாய்ப் பெண்களைத் தழுவிப் புத்திரர்களைப் பெறும் சீவர்களாகிய பசுக்களே என்பதும், சிவனொருவனே சர்வஞ்ஞதாதிஅஷ்டமங்களசுத்தகுணத்தனாய் மாயாதீதனாய்த் திருவருண் மந்திரமயசரீரியாய்ப் பிரணவம் நெற்றிக்கண் முதலியவைகளில் விநாயகசுப்பிரமணியாதிய புத்திரர்களைத் தந்து அத்தேவராதியர்க்கு அசுராதியபயதுக்கம் நீக்கியருளும் பசுபதி என்பதும் காண்க.

## அறம்வளர்த்தநாயகி துதி.

உலகரெலா மெவற்றினுமே லொளிரறமே
யொருவாம லுடன்சார்ந் தின்ப
நலனருள்வ தெனக்கருதி நவிற்றியுயக்
காட்டுதலே நயந்தென் றொன்று
மலகிலறம் வளர்த்தருளி யபூர்வவா
கீசரிடத் தமரு மன்னை
மலர்புகழ்சேர் சோழபுர வாநகர்வாழ்
பரசிவைதாள் வணங்கி வாழ்வாம். (எ)

## வரதவிநாயகர் துதி

விரத யோக விழுத்தவ வேட்கையோர்
பரவி நாளும் பதத்துணை போற்றுறப்
பொருவில் சோழ புரத்தருள் கூர்த்தமர்
வரத வேழ முகத்தனை வாழ்த்துவாம். (அ)

## சுப்பிரமணியர் துதி

பிரணவ சகித மாகப் பேசுமைந் தெழுத்தே யென்றுஞ்
சரவண பவகு மாரா யந்நம வென்றுஞ் சாற்றுந்
திருமனு வாறெ ழுத்தே திருமுக மாக்கொண் டாளுங்
குருபா னம்பு யத்தாள் கூறிமெய்ப் பேறு சார்வாம். (கூ)

## நடேசர் துதி.

உருவருவி லுதித்தமறை யுள்ளுறுமைந்
தெழுத்தினுமே லாதுக டந்த
பெருவெளியந் தருண்மொழிவாய்ப் பெருங்காதை
நிரம்பளவும் பிறங்கி நீண்டு
வருமுலகெ லாமெனுமைந் தெழுத்தினுல
குயவந்நூல் வயங்கத் தந்தோன்
திருநடனஞ் சிற்சபையிற் செய்தருள்குஞ்
சிதபாதஞ் சிந்தை சேர்ப்பாம். (கo)

உருவருவ சதாசிவமுகத்துவந்த வேதத்துள்ள ஐந்தெழுத்தினுமேலாய், அச்சாதாக்கியமுங் கடந்த பரநாதப்பெருவெளியில்

தோன்றி அருண்மொழித்தேவர் திருவாக்கினிடமாகப் பெரியபுராணம் நிரம்பும் வரை விளங்கி நீண்டொலித்துவரும் உலகெலாம் என்னும் ஐந்தெழுத்தை முதலிடையீற்றில் வைத்து அவ்வாற்றலினால் உலகெலாமுய்தற்குரிய அப் பெரியபுராணத்தை விளக்கமாகத் தந்தோனாகிய நடராசவள்ளலென்க.

## சிவகாமியம்மை துதி.

அன்னைகுண மத்தனணித் தாயுளசேய்
கட்கருள்வா னறைதன் மேனு
மின்னமுத மளித்தோம்ப லெனும்வாய்மை
யுலகுணர்த்து மிதமீ தென்ன
மன்னுமணி மன்றனையே நோக்கியணித்
தமர்ந்துலக மைந்தர்க் கெல்லாஞ்
சின்னடன வமுதருத்துஞ் சிவகாம
சுந்தரிதாள் சென்னி சேர்ப்பாம். (கக)

## சோமாஸ்கந்தர் துதி.

அநிர்தசட ருக்கமொழித் தாவியுய
வருண்முதல்வ னானே யென்னு
மினியதிலை யம்முன்றிற் கெதிர்மறையாஞ்
சத்துசித்தா னந்த மேயப்
புனிதைகுக னொடுதானுங் போற்றியன்மூ
வுருவாய்ச்சார் பொற்பிற் றேற்றி
நனியருள்சோ மாக்கந்தர் நறைமலர்த்தாண்
முறையுளத்தா னமந்து வாழ்வாம். (கஉ)

அந்ர்தம் சடம் துக்கமாகிய இம்மூன்றிற்கும் எதிர்மறைப் பொருள்கள் சத்து சித்து ஆனந்தமாம். அந்ர்தம்—பொய்,

## தக்ஷிணாமூர்த்தி துதி.

வேதவே தாந்தமெலா மிகவுணர்ந்து
‡நால்வர்மயன் மிகலா ஞதன்
பாததா மரைபணிந்து பரனேயிம்
மயலொழிநூல் பகர்கென் றேத்த
மோதவா கமத்தொளிரு முப்பாத
நிலைவிளக்கி முதிர்பே ரின்பப்
போதமோர் திருக்காத்திற் புரிந்தளித்தோ
னிருந்துணைத்தாள் போற்றி வாழ்வாம். (கங)

‡ நால்வர்— சனகர் சனந்தனர் சனாதனர் சனற்குமாரர், மோதம்—இன்பம்.

## திருநந்திதேவர் துதி.

கயிலை மால்வரை காத்தயன் மான்முனோ
ருயமுன் வந்து பணிதர வுட்புகு
நயம வர்க்கரு ளுபக னந்தியம்
புயம லர்ப்பதம் போற்றி யிறைஞ்சுவாம். (கச)

## உலகசுந்தரி துதி.

முன்னாண் மகிடா தியபகைகண்
முருக்கிச் சுரரா தியர்ப்புரந்தாங்
கின்னாட் பாண்டி வளநாட்டி
லிலங்குஞ் சோழ புரத்தமர்ந்து
†தன்னார் நாரா தியரையிடர்
தடிந்தோம் புலக சுந்தரிதன்
பொன்னார் கமலத் துணையடிகள்
போற்றி நலனார்ந் தின்புறுவாம். (கரு)

† தன் ஆர் நரர்—தன்னையடைந்த நரர். தன் நார் நர ரெனக்கொண்டு தன்னிடத்து அன்புள்ள நரரென்பதும் ஒன்று.

## திருஞானசம்பந்தர் துதி.

உமைமுலைப்பா னேருட்ட வுண்டுமரன்
றிருப்பெயரா யொளிர்வி லாச
மிமைதருமைந் தெழுத்தெழுது மிணைத்தாளங்
கைக்கொண்டு மின்னும் பற்பல்
கமைதருமற் புதத்தாலுங் குகனேதா
னெனும்வாய்மை காட்டி யாளும்
விமலனருட் சம்பந்தன் விரைமலர்த்தா
மரையிணைத்தாள் விரும்பி வாழ்வாம். (கசு)

## திருநாவுக்கரசர் துதி.

§சமணிழிவு மதுமுதலாஞ் சமயமெலாங்
கடந்தேறுந் தனிரா சாங்க
விமலநிறை சைவநிலை மேன்மையுநே
ராசனுக்கும் விளக்கி மான்ற
வமணொழித்தவ் வரசுயவே யவண்புகுந்து
பற்பல்செய லருமை காட்டி
நமையருளு நாவரசர் நளினமலர்த்
திருவடிக ணமந்து வாழ்வாம். (௧௭)

§சமண்சமயத்தினிழிவும் சைவசமயத்தின் மேன்மையும் அச்சமணர்போதனையிலகப்பட்ட அரசனுக்கும் நேரே விளக்கி, அவ்வரசன் மயங்கிநிற்கும் அவ்வமணரை ஒழித்துச் சைவஞ்சார்ந்துய்தற்காகவே அச்சமண்சமயத்திற்புகுந்து பற்பல அற்புதச்செயல்கள் காட்டியருளிய நாவரசரென்க.

## சுந்தரமூர்த்திகள் துதி.

திருக்கயிலைச் சிவனுருவே திகழாடி
தனில்வந்துஞ் செகமெ லாமுய்ந்
தருட்கமழு நெறிசேர வவனருளி
னாருருவி னடுத்தம் மாண்பு
பெருக்கியவ னேயிவரும் பிரணவவெண்
களிறுகைத்தப் பிரான்றா னென்னுந்
தெருட்குறிசுந் தரமூர்த்தி திருவடிக
ளனவரதஞ் சிந்தை சேர்ப்பாம். (௧௮)

தான் சிவரூபியாயிருந்தும் உலகம் சைவநெறி சார்ந்துய்தற்காகவே திருவருளினால் நரரூபியாய்வந்து சைவநெறி விளக்கி முடிவிற் கயிலையிற் செல்லுங்கால், சிவனுக்கேயுரிய பிரணவரூப யானையிலேறிச் சென்றமையாலும் சிவனே தானென்னும் தெளிவைக் குறிப்பித்தருளிய சுந்தரமூர்த்தி என்க.

## திருவாதவூரடிகள் துதி.

கயிலையின்முற் றதிகார கனங்கொடுவீற்
　　றிருந்தருளுங் கருணை வாய்மை
நயனிறைநந் தீசுரனே நானிலமுய்
　　வான்வாத நகரிற் போந்தே
யயனெறிதீர்த் தருணெறிசேர்த் திடப்புரிந்து
　　பற்பலவா மற்பு தத்தின்
செயல்விளக்குந் திருவாத வூரடிகள்
　　சீரடிகள் சென்னி சேர்ப்பாம். (கக)

## சண்டேசுரர் துதி.

வேத முதல்வன் சிவனேயா
　　மெய்ம்மை தேர்ந்து சைவநெறி
நீதி நிலைநின் றுலகினரந்
　　நிமலற் பூசித் துறுபயன்கொள்
சீத நலந்தா னேயருளுந்
　　திறல்கூர் தலைமை மேற்கொண்டு
நாத னணிவாழ் சண்டேசர்
　　நறைமென் கமலத் தாள்பணிவாம். (உo)

## உண்மை நாயன்மார் துதி.

பெண்மையோர் பாகத் தெம்மான்
பேணுமன் பினரெ வர்க்கு
மண்மையோ னெனலோர்ந் துய்வா
னவனிபல் குலத்து வந்து
திண்மைசேர் பணிக ளாற்றித்
திருத்தொண்டத் தொகையின் மேவு
முண்மைநா யன்மார் பாத
முளத்தமைத் துவந்து வாழ்வாம். (உக)

சிவபெருமான் எந்தச் சாதியினராலும் மெய்யன்பினர்க்குச் சமீபித்தருள்கின்றவனென்பதை உலகர் நேரே தெரிந்துய்தற்காகவே பூமியில் பலசாதியிலும் அவதரித்தருளித் திடபத்தித் திருத்தொண்டுகள் செய்தருளி அத்திடத்தினாற் சுந்தரர் திருத்தொண்டத்தொகையிற்சேர்த்துத் துதிக்கப்பெற்ற உண்மைநாயன்மாரென்க.

## சேக்கிழார் துதி.

உலகெலா மேற்கொண் டுய்வா
னுலகெலா மேற்கொண் டன்பர்
நலனுலாங் கதைப்ப ரப்பை
நவின்றருள் குன்றை வேந்த
ரலகிலா மகிமை வாய்ந்த
வருண்மொழித் தேவர் தூய
மலர்நிலாஞ் சேவ டிக்கண்
மனநிலாம் வகைசெய் துய்வாம். (உஉ)

சிற்சபேசர் திருவருளால் சிதாகாசத்தெழுந்த உலகெலாம் என்னும் திருமந்திரத்தைச் சிரமேற்கொண்டு, அன்பர் கதைப்பரப்பை (திருத்தொண்டர்புராணவிரிவை) உலகெலாம் மேற்கொண்டுய்வான் நவின்றருளிய ... வேந்தராகிய ... தேவருடைய ... சேவடியினிடத்து நமது மனம் நிலவும்படி வைத்துய்வாமென்க.

## சந்தான குரவர் நால்வர் துதி.

வெண்ணெய்மெய் கண்ட நாதன்
    விரைமல ரடிகள் போற்றி
நன்னாரு ணந்தி யாசா
    னுண்மலர்ப் பதங்கள் போற்றி
தண்ணரு ளிகம ஞான
    சம்பந்தர் தாள்கள் போற்றி
வண்ணவின் மன்ற வாணன்
    வழுத்துமா பதிதாள் போற்றி. (உரு)

## அரதத்தசிவாசாரியர் துதி.

புரத்தவர் சைவ நீக்கிப்
    புத்தராக் கரியத் தீமை
யிரித்திடக் கஞ்ச னூர்வை
    னவர்குலத் தெய்திக் காய்ந்த
வெரித்திக ழயபீ டத்தி
    னிருந்தருட் சைவ மேன்மை
தெரித்தரு ளரதத் தாசான்
    சேவடி சென்னி சேர்ப்பாம். (உசு)

அரி—விஷ்ணுமூர்த்தி, சைவநெறியில் நின்ற திரிபுரத்தவர்களை, அந்நெறியினீங்கச்செய்து புத்தர்களாக்கிய தீமை நீங்கும்படி சிவனருளால் கஞ்சனூரில் வைஷ்ணவர்குலத்திலவதரித்துப் பழுக்கக் காய்ந்த இருப்புப்பீடத்திலிருந்துகொண்டு "காயத்திரிவல்லபத்துவாத் உயர்காயத்திரிக்குரியபொருளாகலின்" என்பது முதலிய பற்பல ஏதுக்கூறி உள்ளபடி சைவநெறியின் மேன்மையை யாவருக்குந் தெரிவித்தருளி, அவ்வைஷ்ணவமுதலிய அந்நிய சமய நிராகரணமும் சைவஸ்தாபனமுஞ் செய்தருளிய அரதத்தசிவாசாரியரென்க.

## பட்டினத்தடிகள் துதி.

பரையிதய கமலமதாய்ப் பொன்மன் றாதி
பரிவாரஞ் சூழநடுப் பயிலு மாண்பின்
விரவுமிடை மருதினிறை மகாலிங் கேசன்
மிளிர்மகனு யற்புதங்கள் விளக்கித் தம்பா
லருள்விளையாட் டுடனமர்ந்து பொருள்பெ ருக்கி
யருங்கவிதந் தொருங்குநிலை யளித்துப் பேரின்
பிருநலனுந் தரப்பெற்ற பட்டி னத்தெம்
மிறைவாடி நறைமலர்க ளிறைஞ்சிவாழ்வாம்.(உரு

உமையம்மையின் இருதயகமலமாகி விளங்குவதும், பொன்மன்றமுதலிய பற்பல சிவஸ்தலங்களைத் தனக்குப் பரிவாராலயங்களாக்கொண்டு நடுநாயகமாக விளங்குதலால் இடைமருதூரென்னுங் காரணப் பெயர் பெற்றதுமாகிய திருவிடைமருதூரில், அதனை விளக்கும் மகாலிங்கநாமம் பூண்டு அனவரதசாந்நித்தியராய் வீற்றிருந்

தருளுகின்ற சிவபெருமானே தமக்குப் புத்திரராய்வந்தருளிப் பற்பல அற்புதத் திருவிளையாடல்கள் செய்து பதினாறுவயசுவரையிருந்து "காதற்றவூசியும்வாரா"தென்ற கவிதந்து மனம் ஒருப்படுகிலையளித்துப் பாமுத்தி தாப்பெற்ற பட்டினத்திறைவரென்க.

## இலக்குமி துதி.

புரந்தரு னீல மேனிப் புங்கவ னிதய பீடத்
திருந்துபொன் னொளிப ரப்பி யவன்செய லியல வென்றும்
விரிந்தபல் பொருளுந் தந்து மேதக வுலகம் போற்றுந்
திருந்துசெங் கமலத் தன்னை செய்யதாள் சிந்தை செய்வாம்.

## சரஸ்வதி துதி.

புநிதநான் மறைகள் *போற்ற
பூர்வவா கிசர்ப் போற்றி
யினியபே ரருளி னல்வாக்
கெவர்க்குமெஞ் ஞான்று நல்கு
நனிசிறப் புற்று வாழு
நாமகண் ஞானச் செல்வி
யனகவெண் கமலத் தன்னை
யடிமலர் முடிமேல் வைப்பாம். (உஎ)

* போற்று அபூர்வ எனப் பிரிக்க.

## அகஸ்தியர் துதி.

சிவனையொத் தமைமுன் னேரிற்
றெரிதர நிறையிற் காட்டி
யவனுல குயவைத் தாளு
மருந்தமி ழெவற் றுமேலாய்த்
திவளுமின் னிசைத்தென் வாய்மை
() தேற்றிய னூறந் தாண்மா
தவன்மல யத்தெங் கோமான்
சலசத்தா'டலைக்கொண் டுய்வாம். (உஅ)

()தேற்று இயல் நூல் எனப் பிரிக்க. இயல்—இலக்கணம். ஆள் மாதவன் என்க.

## குரு வணக்கம்.

சிவநிய மங்கள் யாவுஞ் சிறிதுமா சுறுதி லக்கிச்
சிவநிறை வுற்று மூன்று திகழுமாச் சிரமம் பேணிச்
சிவநெறி விளக்கு நாவ லேசர்வன் றொண்டர் சீர்மெய்ச்
சிவகுரு 0 மூவர் தூய சேவடி சென்னி சேர்ப்பாம். (உகூ)

0மூவரில்—நாவலர், பிரமசரியம், வன்றொண்டர் கிருகஸ்தம். மெய்யப்பசுவாமிகள் சந்நியாசம் ஆகிய மூன்றாச்சிரம நிலைநின்றவர்களென்க.

## அவையடக்கம்.

மாண்புறு புலவோர் தம்மி
　　லொருவனு மதித்தற் கேய்ந்த
வேண்புலஞ் சிறிது மில்லே
　　னீண்டவை யடக்கங் கூறின்
வீண்புக லாகு மென்றே
　　வெருவினே னாத லாலச்
சேண்புல வோர்ப்ப ணிந்தத்
　　திறலின்மேற் றொடங்கி னேனால். (ங௦)

ஆகத் திருவிருத்தம் ங௦.

---

சிவமயம்.

# திருநாட்டுப்படலம்.

———(o)———

எம்மொழிக ளினுமேலா 0 மிருமொழியிற்
காடினிய விசைமிக் கேய்ந்த
வம்மொழியாம் வடமொழிபோ லாதினிமை
யெனும்பொருள்வாய்ந் ததன்மே லோங்குஞ்
செம்மொழியா யின்னிசைசேர் திருத்தமிழே
செழித்தெங்குந் திகழா நிற்கு
மும்மையுல கும்போற்று முதுபாண்டி
நாட்டுவள மொழிகி ன்றேமால். (க)

0 இருமொழி—வடமொழியும், தென்மொழியும்.

(வேறு.)

உலகினி லரச ரெல்லா மோர்ந்துசெய் துய்வான் வேதத்
தலையொளிர் பரம னேசுந் தரப்பெரு வழுதி யாகி
நிலவுயி ருயத்தெம் மாறு நினைவுமின் றிறைஞ்ச வாணை
செலவுல கெலாமும் போற்றுஞ் சீரது பாண்டி நாடு. (உ)

ஆகி உலகெலாமும் ஆணைசெலப் போற்றுமென்க. போற்றல்—காத்தல்.

சத்தியே சத்த னெச்சார்ந் தியக்கிடுந் தாத்த னென்னு
மெய்த்திறன் விளக்கு வாளாய் மேதகு தடாத கைப்பேர்ச்
சத்தியே யுடங்கு சார்சுந் தரற்களித் தியக்கும் வேத்து
மெய்த்திறன் வாய்ந்தெந் நாட்டு மிளிர்வது பாண்டி நாடு.(௩

தந்தைதாய் பொருள்கண் மைந்தர் தமக்குரித் தவர்பின்னெ
முந்துநா லுரைத்த நித்த முதல்வன்றன் னரசு கந்த [ன்று
மைந்தனுக் கருள வச்சேய் மகிவய முறமேற் கொண்டவ்
வுந்தர மியற்றுஞ் சீர்த்தி யொளிர்வது பாண்டி நாடு. (௪)

முதல்வனாகிய சுந்தரபாண்டியனென்க. கந்தமைந்தன்—உக்கிர பாண்டியன். உகந்தமைந்தனென்பதுமொன்று.

சத்தெனுந் தந்தை சித்தாந் தாய்நடுச் சேயா னந்த
மொத்தசச் சிதாந னந்த மேதொடர்ந் துலக ளிக்கு
நத்துசீர் வேறெந் நாடு நாடரி தாகத் தன்பால்
வைத்தொளிர் கின்ற திந்த வளம்பொலி பாண்டி நாடு. (௫)

சத்து சித்து ஆனந்தமாகிய முப்பொருளுமே தந்தை தாய் மைந்தனென்னும் மூன்று ரூபமாகி வந்திருந்து உலகளித்தருளிய எவராலும் விரும்பத்தக்க சிறப்பை, வேறெந்த நாடும் நினைத்தற்கும் அரிதாகத் தன்னிடத்திலேயே வைத்துக்கொண்டு பிரகாசிப்பது இப்பாண்டிநாடு என்க.

குடக்கினிற் சேர நாடு கொங்குநா டாதி மேவ
வடக்கினிற் சோணு டாதி வயங்குறக் குணக்குந் தெற்குந்
தடக்கடல் பரவ நாப்பட் டனிப்பெரு மணியாய் வானுங்
கடக்கும்பல் வளங்கண் மல்குங் கவினது பாண்டி நாடு. (௬)

விண்ணுலகெவைக்குமேலாய் விளம்பரிதாய்விண்ணோர்க்கு
மண்ணருஞ் சிவலோ கம்மே ாரசுக்கீந் திம்மண் ணோர்க்கு
மென்னுமெய்ப் பொருளு மெண்ணரி யாங்கினி தருளும்வாய்
பண்ணலந்தேற்றுசீர்த்திப் பழம்பதி பாண்டிநாடு. (எ)மைப்

உலகுபன் னூன்கி னுக்கு மோரிறை யெனும்வ லாரி
வலவம ருடைந்து வேண்டி மாரிபெய் விப்பல் யாத்த
குலமுகில் தருகென் றேற்றுக் கொண்டுரைத் தாங்கம் மாரி
மலர்திறை யளக்குஞ் சீர்த்தி வாய்ந்தது பாண்டி நாடு. (அ)

பொன்மலைச் சிரத்திற் செண்டாற் புடைத்தபின் னடி
தாழ்ந் தேத்து, மம்மலை பொன்னெ லாங்கொண் டருள்
கெனவேண்ட வேண்டுஞ், சொம்மெடுத் தடைத்து மீனத்
துசநிறீஇ யாணை யுய்த்த, செம்மல்செய் யாசின் மேன்மை
திகழ்வது பாண்டி நாடு. (௯)

அம்மலை—அம்மேருவினதிதெய்வம். சொம்—பொருள்.

வெள்ளிவெற் பிறைசொ ரூப வியனந்தி வாத வூரெம்
வள்ளல்செய் யமைச்சு நீடு மாறர்செய் யாசு மன்பு [றுங்
கொள்குலச் சிறைப மைச்சுங் கொண்டுல கெல்லாம் போற்
றெள்ளுசீர்படைத்தநிந்தத் திருத்தமிழ்ப்பாண்டிநாடு. (க0)

ஊரெலா நீதி வாழ்க்கை யுளமெலாஞ் சோதி வேட்கை.
பேரெலாஞ் சிவநா மங்கள் பேச்செலாந் தவநே மங்கள்
சீரெலாந் திகழும் வாய்மை திசையெலாம் புகழுந் தூய்மை
() யாரெலா முழவு நீடு மாங்கெலா முழவு கூடும். (கக)

எங்கணுந் தருமம் பல்கு மெங்கணும் பொருள்கள் மல்கு
மெங்கணு மின்பம் புல்கு மெங்கணு மன்பே நல்கும்
பொங்குமிந் நாட்டின் மன்னும்பொதுவள மெவரு ரைப்பார்
திங்கண்மும்மைமுன்னுய சிறப்பொருவாறிசைப்பாம்.(கஉ)

மாயினி லடுத்தார்க் குண்மை வழங்கலு மன்றி யியாப்
பொருளர்பாலடுத்தந்தோவிப் பொருள்வறிது றுதறஞ்செய்
தூரியவின் புறுகென் றேதி யுய்த்திடும் பூதி மேனிக்
குரவர்போற்சென்றுகொண்மூக்குரைகடற்புக்கதன்றே .கங

---

() ஆர்—பூமி.

(வேறு.)

புக்கமுகி லொலித்துவரிப் புனன்மாந்தி யுவரொழித் துப் போற்றி யுன்னைத், தக்கநறு நீரோக்கித் தனிமலயத் தினினிறையத் தந்த தன்மை, யக்குரவ ரருளினிடித் துரைத்தனைய செல்வரிடத் தளித்த லின்றித், தொக்கபொ ருள் கொண்டதனைத் தூய்தாக்கிச் சிவார்ப்பணஞ்செய் தொன்மை போலும். (கசா)

எப்பொருளுஞ் சிவார்ப்பணஞ்செய் தேறுகர்கென் றருணூல்வா யிலக்கல் போல, வப்புனலப் பானேங்க ரகத்தி யமா முனிவரன்வா ழசலத் துச்சி, யிற்பொழி0வான் செல்வ வியல் பிதன்பெயருந் தெரித்திடலோர்ந் திலங்க றங்கள், கைப்பொருளூற் றளவேசெய் கருணைநின்ற பெரியவர் போற் கவினுற் றோங்கும். (கரு)

(வேறு.)

பொருள்படைத் தவா றஞ்செய் யாதப கீர்த்தி பூணுங்
கரிசுநேர் காட்டு கின்ற கரியவார் கலியுண் மேகம்
பொருள்படைத் தவா றஞ்செய் துடன்சுப கீர்த்தி பூணும்
பெருமைநேர்காட்டுமுற்றும் பெய்துவெண்ணிறம்பெற்றம்ம

0 வான்—மேகம்.

குலமுகில் மலயம் பெய்ந்நீர் குரவர்க ளிலிங்கத் தாட்டு
மலர்புன லருவி முல்லை மாலைவெண் சங்க மன்னஞ்
சுலவளிக் குலந்தூ பஞ்செந் தூக்கம லந்தி பம்மா
நிலவுறு சிவபூ சைச்சீர் நிறைநலன் விளக்கு மாங்கண் (கஎ)

பெய்நீரானது ஆட்டும் மலர்புனலாக, அருவி முல்லைமாலையாக, சங்கம் அன்னமாக, அளிக்குலம் தூபமாக, கமலம் தீபமாகச் சிவ பூசைச் சீர் நலன்விளக்குமென்க.

திருவயி டேகித் தோர்க்குச் சிவபா னருளின் வெள்ளம்
பெருகிவந் துதவ னேரே பிறக்கலின் முகிலவ் வெற்பில்
விரியவெங் கனும்பொ ழிந்த விபத்தகு * புவனம் பற்ப
லருவியாய்த்துனைந்துபார்வந்தணைந்தனுநதியொன்றுகி.(கஅ

பலவென விரிந்து மொன்றும் பானென வுயிர்முற் றேம்ப
நிலனுறு பொருநை யாமந் நிறைநதி மலய முன்னு
மல்லநில மாங்கு றிஞ்சி மான்புறு திணைப ரந்து
நலநிறை வளம்பெ ருக்கு நலத்தினிற் சிறந்தி லங்கும். (கசு)

அருளிறை பாவ நாச மாதிய தலங்க டம்மிற்
றிரைநெடுங் கரத்தால் வாரிச் செழுமலர் சீத நீர்தூய்த்
தெருளிறை யன்பு பூண்டு செய்சிவ பூசைத் தொண்டர்
பொருவருஞ்செய்கைகாட்டிப் போந்திடும்பொருநைநீத்தம்.

---

* புவனம்—நீர்.

இந்நில வேடர் வேத மெடுத்துரை குமர வேடன்
பன்னியாய் மணப்பதந்தங்கள் பாவையை யளித்தோரென்று
துன்னுமன் புருக்கண்ணப்ப ருதித்தருள் குலத்தரென்றான்
மன்னிறையிவர்மாண்பெம்மால்வழுத்துதற் கெளியதேயோ.

(வேறு)

குறிஞ்சி நிலத்திற் றிருக்கோயில் கொண்டு வாழ்தன்குரு பானு, நிறைந்த குகன்பே ரருட்கடலி னிமல மலய முனிவ ரன்றன், சிறந்த போன் பாறுபுகுந் திறம்போற் குறிஞ்சித் திணைபார்த்து 0 விறந்த பொருநை மேனோக்கி யிளிரு முல் லைத் திணைபுகுமால். (உஉ)

புகுங்கா * லிரண்டு திணைநாப்பட் பொங்கு தழலாய் நண்பகலின், மிகுந்து திடரிற் றிரட்சிலைகள் விரிந்தி ரவி வெங் கதிர்பார்த்து, நகுந்தின் சுரமாண் டிணையனைய நதி காண் டலுமாய்ந் தொழியகடந், துகந்து புறவ மெதிர் கொள்ள வொல்லென் றெழுந்து புல்லுமவண் (உ௩)

முல்லைத் திணையி னுட்புகுந்து †முல்லை நலஞ்சால் குல மகளி, ரல்லை வெளிறுக் குந்குழலி லணியு முல்லை முதனி ரைமுற், சொல்லும் பொருளெ லாமோம்பு தூநீ ரெங்க

0 விறந்த—மிகுந்த. * இரண்டு திணை—குறிஞ்சி முல்லை இரண்டுமென்க. † முல்லை—கற்பு. முல்லைமுதல்—முல்லைச்செடி.

னும்பரப்பிச், செல்லும் பொறிய மிசைத் தோன்றித் திக
ழும் பொருளைப் போரு. (உச)

அண்டன் பொதுவன் பசுபதியா மமல பரம சிவன்றி
ருப்பேர், கொண்டு பசுவோம் பிறைமைமுதற் குலவு நிலைய
ரிந்நிலத்தோர், பண்டு புரிமுத் தொழிலிடையோம் பலேச்
செய் திடைய ,னெனுமாவிம், மண்டு நிலத்தே வாலவர்க
ளிடைய செனும்பேர் வாய்த்தனரால். (உரு)

உவமந் கியர்பாற் சிவதிக்கை யொளிரு மிலிங்க முற்றை
பெற்றுச், சிவபூ சனைசெய் ,கருட்சைவ தெய்வ நெறிசார்ந்
துய்கண்ண, வவிரைந் தெழுந்தோ சையிற்சிவனை *யழைத்
தா னுயர் திருமூலர், இவர்கள் குலத்து வந்தனரே வினியா
ரிவர்சி ரிசைக்குகரே. (உசு)

புணர்தல் பிரித விருத்தலொடு புலத்த லிரங்க லிக
ளைந்து, திணையு ளனியின் புறக்கூடுந் திணையா மருத
மிகேதுடற்கின் புணவு வகையு ளுபர்ந்தின்பூட் டுறுநெல்
விளைத்துப் பணைத்திலங்கிப், பணையென் பெயரி னுந்தேற்று
பண்பிற் றெனச்சார்ந் ததுபொருளை. (உஎ)

குறிஞ்சியிற் புணர்தல், பாலையிற் பிரிதல், முல்லையில் இருத்தல்
மருதத்தில் புலத்தல், நெய்தலில் இரங்கலென்க.

---

* அழைத்தவென்னும் பெயரெச்சத் தகரந்தொக்கது.

மருத நிலமெங் கணும்விரிந்து வளங்கள் பெருக்கி
வருபொருநை, விரைமென் மலர்பொன் மணிமுதல மிலை
ந்து வளையா திகளொலிப்ப, வுரிமை யுறுதன் னாயகப்பே
ருததி யுடன்சார்ந் துவந்ததுமேற், பெருகு சாலி விளைவா
கிப் பிறங்கு வளனோர்ந் தாங்குரைப்பாம். (உஅ)

(வேறு)

நிறையுமிக் கடற்சார் பூமி நெய்தல்வாழ் பரதர் செய்கை
யறைவதென் மணிமீன் கண்டு மாற்களித் துறுதஞ் சாதித்
துறையினு மசைவி லன்பாற் றூயவீ டுறல்வி ளக்கு
நிறைபதி பத்த ரன்னோர் நிகழ்குலத் தலைவரென்றால். (உகூ)

பொருநைநன் னீத்தங்கண்டு போற்றுதாய்முகங்கண்டோடி
வருமகா ரென்ன மள்ளர் மலிகிணை யொலியெ ழுப்பி
யருகுசார்ந் துரிய காலி னணையநீ ரியக்கித் தத்த
மருவிபகழனியெங்குமடுத்துழுதொழில்செய்வாரால். (௩0)

அமரர்கோ னடிகள் போற்றி யலமுகத் தேறு பூட்டிக்
கமரொழிந் திளகி நின்ற கழனிமுற் றுழுத சாலி
னிமிர்மணியொதுக்கியப்பர் நிறைசெயல்விளக்கிமேலொப்
புமைபுரிபரம்புகைத்தாங் குழவர்நாள்விதைத்தல்செய்தார்.

மனநிறை மகிழ்ச்சி பொங்க மள்ளர்கள் விதைத்த சாலி
கனகளத் திறைவெண் மேனி கடுப்பவங் குரித்தெ ழுந்து

வனமுலை யுமைபைம் மேனி மானமேல் வளர்ந்து பச்சை
யினவிதழ் விரிந்தி யாவுஞ் சிவசத்தி யெனல்விளக்கும்.(௩௨

உலகம் யாவும் சிவசத்திமயமென்பதை விளக்குமென்க.

வளர்தரு சாலிபக்கு வந்தெரிந் துழவர் கூறக்
கிளருழத் தியர்ங் நாறு கெழுதகப் பறித்தெ டுத்துப்
பளகறு செய்க ளெங்கும் பதித்தனர் களமர் நாளும்
விளைபய னிறைய வாங்கு வேண்டுவ செய்துவந்தார். (௩௩)

சாலிகள் வளர்ந்தோர் பக்கஞ் சாய்வற நடுவி னிற்கு
மேலவ ரெனநே ராக மேல்வளர்ந் தனைய நீதிச்
சிலர்நற் பயனுற் றுங்குட் செறிகருக் கொடுதி கழ்ந்து
பாலன கதிர்க ளீன்று பசந்துசெந் நிறம்ப ழுத்த (௩௪)

கதிர்ப்பொறை சுமக்க லாற்றுக் கவினிறை சாலி யெல்லா
முதித்தகா யடிவ ணங்கு முத்தம ரியல்பு போல
விதத்ததன் வயனி லஞ்சாய்ந் திலங்குற விளைந்து முற்றி
யதைத்தெரிந் துழவ ரன்ன வலர்கதி ரரிய லுற்றார். (௩௫)

குபங்கொடு கதி ரிந்து குவியரி சுமந்து பல்போர்
நயம்புரிந் தனைய சென்னி நாற்புறஞ் சாய்த்த தன்மேல்
வயம்புரி யேற்றி னங்கள் வளைந்துபன் முறையு ழக்கி
யியங்கியபின்பலால மிரித்துநென் மணிகொள்வாரால். (௩௬)

குற்றங்கண் முற்றுநீக்கிக் குணநிறைவொன்றே கொள்ளும்
பெற்றியர் போற்ப லாலம் பிரியமேன் மேல டித்துப்
பொற்றிரள் போற்பி றங்கிப் பொலிதரு மினிப சாலி
யுற்றன முற்றுங்கொண்டு முய்த்துணர் வொன்றுசெய்வார்

நீறுகண்டிகைமெய்வேட நிலைபர்போற்பொய்வேடங்கொண்
டேறுவஞ் சகரை யுள்ளீ டின்மைதேர்ந் நிரித்தன் பென்று
மாறிலார் தமையே பேணு மாண்பர்போ னெல்விற் சார்ந்த
விறிலாப்பதடிகாலின் விலக்கிநென்மணியேகொள்வார்(ரு அ)

மகமுத லாய நன்மை மாநிலத் தியங்க வூறு
புகுதாா தோம்பி யற்றூர் புயன்மறி முக்காற் பெய்யுந்
தகுதிப்பொற் கோயில் வேந்தர் தம்மினு மெனவக் கோயிற்
ககமகிழ்ந்துதவிவேந்தர்க் காறிலொன்றளந்தளிப்பார். (ருகூ)

எஞ்சிய நென்முற்றுந்த மிற்கொணர்ந் தமைத்த பின்னு[வர்
மஞ்சுநேர் 0தேவர்பாத்தூண் வாய்மைதேர்வேளாண் செல்
விஞ்சுதென்புலத்தார்தெய்வம் விருந்தொக்கறுனென்றேது
மஞ்சினிற்பகுத்தளித்தே யறநெறிநிலைநின்றுய்ப்பார். (சo)

விளையுமிச் சாலி யொன்றே மேலும்பஃ றுனி யங்கள்
வளரும்வான் கதலி தெங்கு மாபல வாதி பற்பல்
கிளர்பெரும்பயன்களெல்லாங்கெழுமியெஞ்ஞான்றுமோவா
துளபலபண்டாரம்போன்றுளிருமிந்நாட்டினெங்கும்: (சக)

---

தேவர்—வள்ளுவர். பாத்தூண்—பகுத்துண்டல்.

இத்திரு நாட்டின் வாழ்வா ரினியசி றங்க ளெல்லா
நத்திநின் றியற்று வாரந் நலங்களெவ் விடருற் றாலு
மெய்த்திற லன்போர் காலு மெலிவுறா வுறுதி வாய்ப்பா
லொத்துளமுக்கநேர்நின் றுயிரினும்வளர்த்துவாழ்வார். (சஉ

(வேறு)

திருவால வாயாப்ப னூர்பரங்குன் றினிய திருவேட்
கங்கொடுங்குன் றருட்புத்தூர் புனவாய், திருவிரா மேச்சு
ரமாடானைகா னப்பேர் திருப்பூவ ணஞ்சுழிய றிகழ்திருக்
குற் றாலங், திருவார்நெல் வேலிதிருப் பெருந்துறைமங்
கலைகோன் றிகழ்தருமுத் தாகோச மங்கைமுத லாநந்,திரு
நால்வர் போற்றுதலந் திருப்பாண்டி நாட்டிற் றிகழ்தருமிச்
சிருளைத்த தேவர்க்கு மரிதே. (சங)

சிவமயம்.

# திருநகரப் படலம்.

நிருமல னித்த முத்த னேயமிக் கிறைஞ்சு வார்க்கு
வானரு ளபூர்வ வாகீச் சுரனருள் வாய்ந்த பாண்டிப்
பெருமைசொல் லளவிற் றன்றாற் பேணுமவ் வீசன் மேவுந்
திருநகர்ப்பெருஞ்சிறப்புந்தெரிந்தவா றுரைசெய்வோமால் (க)

திருவறம் வளர்த்த வன்னை திகழிடப் பாகன் வானிற்
சுரர்தொழு மபூர்வ வாகீச் சுரனுல கெலாமு முய்ய
வருளுருக் கொண்டு மேவி யமர்திருப் பதிக டம்முட்
பொருவரும் பதியாஞ் சோழ புரத்திரு நகர மாதோ. (உ)

(வேறு)

அறம்வ ளர்த்தவ ளபூர்வவா கீசரோ டமரும்
நிறமி குத்தபொன் மணியொளி நிறைதிருத் தளியை
முறையி யக்குமா றுயிரெனக் கொண்டுதன் முழுச்சீர்ப்
பொறைமி குத்தொளிர் கின்றது சோழமா புரமே. (ங)

வான ளாவுபொற் கோபுர வகைகண்மா ளிகைகள்
மேனி லாவிய திருமதில் மண்டப விதங்க
ளான மெய்த்திருப் பணிபுரி யன்பருக் கனந்தந்
தூந லந்தரு நிலையது சோழமா புரமே. (ச)

அத்தி ருத்தனிக் குரியபூ சனைகண்மெய் யன்பால்
நித்தி யந்நிகழ் நைமித்தி கத்தொடு நிகழு
மெய்த்த காமிய மாகம விதிபுரி விப்போர்
சுத்த வாழ்வுற வருள்வது சோழமா புரமே. (௫)

அரசர் செய்கையின் மேலும்பல் பெரும்பொரு ளளவா
விரிவி னல்கியே பல்பணி மேலுஞ்செய் தெமக்கின்
றுரிய மெய்ப்பொரு ளிப்பணி யேயெனு முறுதி
புரியு மன்பருக் கருள்வது சோழமா புரமே. (௬)

பதியொ டாவிபா சந்தவிர்ந் திரண்டறப் பற்று
மதனை யத்துவி தம்மெனல் விளக்கியாங் கவிரு
மிதுன மாதங்க டொறுந்திரு விழாச்செயு மன்பர்
துதிசெய் வாழ்வுற வருள்வது சோழமா புரமே. (௭)

பதியும் ஆவியும் என்றுமுள்ள இருபொருள்களேயாயினும், ஆவி பாசநீங்கிப் பதியுடன் பிரிவின்றி நிற்றலையே அத்துவிதம் என்று ஒரேபெயரால் வேதாந்தசித்தாந்த மெய்நூலெல்லாம் விளக்கும். அதுபோல ஆணும் பெண்ணுமென்ற இருபொருளாயினும் பிரிவின்றி நின்று மிதுனமென்றொரேபெயரால் விளங்குவது மிதுன ராசி. அத்தகைய ஆனிமாசத்தில் திருவிழா நடத்தலால் அத்துவித மென்பதை விளக்கியதுபோலவென்றும்.

வேத சாலைக ளாகம சாலைகள் விரைநீர்ச்
சீத சாலைக ளோதன சாலைக டிகழ்பன்

மோத சாலைகள் சிவபுரா ணாதிய முழங்கும்
போத சாலைகண் மலிவது சோழமா புரமே. (அ)

சிவனென் றேசிவ தீக்கைசே ரன்பர்ப்பூ சித்தாங்
கவரு ணப்புரி தலிற்சிவ தன்மமென் றறையும்
இவிய நாயன்மார் பூசனை திகழ்திரு மடமுன்
புவிபு கழ்ந்திடப் பொலிவது சோழமா புரமே. (௯)

சிவனென்றே பூசித்து என்றியையும்.

சகல தேவர்மா முனிவர்தீர்த் தாதிதம் முருவிற்
றிகழுந் தூயநற் பசுக்குல மோம்பிச் செழும்பால்
மிகவு மாபதிக் குதவலிற் சிவதன்ம மேன்மை
புகல்ப சும்மடம் பொலிவது சோழமா புரமே. (௧0)

தேவர் முனிவர் தீர்த்தங்கள் முதலியவெல்லாம் தமது வடிவில் விளங்குகின்ற பசுக்களென்க.

நனைசெய் பூமுதல் வளர்த்தலிற் பசுதர்ம நலனு
யினித பூர்வவா கீசரர்க் கிலங்குபன் மலர்கள்
வனைய நல்கலாற் பதிதர்ம மாகியே வயங்கும்
புனித நந்தனந் திகழ்வது சோழமா புரமே. (௧௧)

ஏரி வாவிகூ பாதிபன் னீர்நிலை யிலங்கும்
வேரி மாரிபெய் பூம்பொழி லெங்கணு விளங்கும்
நேரி லாதநல் லறம்புரி நிலைபல நிகழும்
பூரி நீடொளி மலிதரு சோழமா புரமே. (௧௨)

அசா மாயுந்தை விகவியற் றவனிகற் பகமென்
றிசைத ரப்பிறந் தாண்டோரைந் தினிற்கரு வெய்தி
நசையு முக்கண்மக் களைப்பயந் தான்கொள நல்கி
மிசையி லங்கிலாங் கவிநிரை யாங்கணும் விரியும் (கங)

ஞூத மேற்குயி லோமெனுந் தொனியெழக் கூவு
மோதை யோடுறக் கிள்ளைக ளோந்தெழுந் துரைத்தன்
மோத மேதகக் கேட்டவர் முனமுப தேச
நாதர் பாற்கொளு மந்திர மீதென நயப்பார். (கச)

முட்பு றக்கனி பற்பல முதிர்நிரை வருக்கை
யிட்ப மாப்பொருள் சேமித்து வைப்பவர் சிவண
நட்பி னன்னதைப் பிறர்க்கெடுத் துதவிடு நலத்தோ
ரொப்ப மந்திகள் வகிர்ந்தெடுத் தினங்களுக் குதவும் (கரு)

வாவி லேகிநின் றொளிர்தரு வாழையின் குருத்து
மேவி லாவுவெண் மாமதி நாப்பணின் மேவி
வேவி லான்விரி குடைக்கொரு காம்பென விளங்கப்
பாவி லாவுமீ னித்திலக் கோவைபோற் பல்கும். (கசு)

(வேறு.)

ஈவிலார் தமக்கு நன்மை யெடுத்திசைத் திடித்துக் கூறி
நீவிர்நல் லறஞ்செய் தும்மி னென்றறி வுறநி கழ்த்தி
மேவுநன்கொடைசெய்விப்பார் போலெழீ இவிளைகரும்பைத்
தாவரு மாலை யிட்டுச் சாறெழச் செய்வார் பல்லோர். (கஎ)

நாடொறு முதய வெற்பி னண்ணிநின் றத்த வெற்பின்
மாடுறக் கணம்பல் கோடி யோசனை வழிச்செல் பானு
* வோடினைப் பொழியத் தன்பா லுற்றமர்ந் தேகு கென்று
நீடுபொன் மதின்மேற்சென் று நிறையொளிவிரித்து நிற்கும்.

பெருமிதங் கொண்டு வேணிப் பிறங்கிடா லுஞ்சி னேம்பி
னொருவித முய்ந்தோ முற்று முய்வுறத் கெம்மான் பாத
தரிசனம் புரிது மென்னக் கங்கைபா தலஞ்சார்ந் தாங்கப்
புரிசைசூ ழகழ்க்கி டங்கு பொற்புற வாழ்ந்தி ருக்கும். (௧௯)

(வேறு.)

அரனொரு மலர்மென் கைநீண் டளவினி லசைவி லாநின்
லுருநனி வளர்ந்து நாணு முற்றனை யெனப்பொன் மேரு
வரையினை வடபா லோட்டி வயம்பெறீ இநீண்டுவான் பொற்
றருவையு மிழித்து யர்ந்து தயங்குபொற் றேர்கண் மல்கும்.

பாவருந் தவத்தி னூற் பாதமுந் துநிக்கை மாண்பும்
வருமா னன்பி னோர்க்கு மற்றியா முதிக்கும் போதே
யுரியமவ் வியற்கை மேன்மை யுற்றன மெனுங்களிப்பே
மருவுமு வகைக்கயங்கள் வயங்குகூ டங்கண் மல்கும். (௨௧)

எழுபரி நாமென் றெண்ணே வினையது பெயரே யோர்நாண்
முழுதுமோர்புவியே சூழ்வாய் முற்றுலகெலாமோர் கன்னல்

---

* ஒடு—வினைத்தொகை,

கழியுமுன் சென்று மீள்வ மென்றுசெங் கதிர்மா வுக்கு
மிழிவுறாத் தலினு லித்தாங் கெண்ணிலதூரக மல்கும். (௨௨

மானவர் தாமோ மேலை வானவர் மாயா வஞ்சத்
தானவ ராதி யோருஞ் சமருடைக் தஞ்சி யோடிப்
போனவ ராக வேசெய் பொருவிலா வலிய வீர
ரானவ ரளப்பி லாதோ ரணிபணி யாகிச் சூழ்வர். (௨௩)

## பரத்தையர் வீதி.

உலகர்பா தகங்க ளெல்லா முருப்படுத் துதவி வேதா
நிலவிஆய்த் திடுமின் னா ரீதிபொய் மதுமால் வஞ்சங்
கொலைகள வாதி தீமை கொள்கல னாகி மல்கும்
பலர்விழை பரத்தை மார்கள் பயின்மறு குரைக்கலாமே. (௨௪

நஞ்சினி லமுதுண் டேனு நரகினி லின்புண் டேனு
மஞ்சன மிருளொ ழிக்கு மாயினும் பரத்தை மார்தம்
நெஞ்சினேர் குணங்க ளென்று நிகழ்வுறு வறிவொ ழிந்த
மைஞ்சர்கள் புகழ்வா ரன்னர் வஞ்சனை யுரைப்ப தென்னும்.

## ஆவண வீதி.

எத்துணை வளமு நீடி யென்றுமிக் கிலங்கு மேனும்
பத்தனத் துள்ளார் யாரும் பயிலுமாங் காங்க ளித்தாய்
நத்துறு பொருள்களெல்லா நன்றுடன் கொண்டுசெல்வான்
மெத்துபல்பொருடொகுத்து விளங்குமாவணத்தொல் வீதி,

பொன்மலை யாதி யாகப் போற்றுபன் மலைக ளென்ன
மன்மலி நெற்கு வால்கண் மாடமூர்க் காதி பன்மாண்
மின்மலி தானி யங்கள் விண்ணளந் திலங்க லாலந்
நன்மலி யாவ ணஞ்சீர் நண்ணுவண் குறிஞ்சி போலும்.(உஎ)

எச்சுவை களுந்தா னின்றி யமைவுறு தியையுப் பாதி
நச்சிடு கற்பூ ராந்த ராடுபல் பொருள்க ளோர்பால்
மெய்ச்சுறு பருத்தி பட்டு விழுத்தகு சுவண நூலின்
வைச்சொளிர் துகிலடுக்குவருக்கங்கள்மலிபுமோர்பால். (உஅ)

மாற்றுயர் செம்பொன் றேசு மலிநவ மணிக ளோர்பால்
போற்றுகங் கணம தாணி புனைகுழை வயிரத் தோடு
தேற்றுகண் டிகைகள் சூழ்ந்து திகழ்மணி மோதி ரங்க
ளேற்றநூ புரமுன்னும்பல் லெழின்மணி யணிகளோர்பால்.

நறுமணங் கமழும் பற்ப னுண்மலர் வகைக ளோர்பால், வெறிசெய்தா ரிண்டை தொங்கல் விரைத்தொடை நிரைக ளோர்பால், மறுவறு வில்வ மாதி மலர்வடித் தெடுத்த பன்னீர், செறிவிரை கலந்தவ் வாசந் திசைகமழ் சந்தமோர்பால்.

பொன்னினும் வெள்ளி யாலும் புரிந்தொளிர் குடங்கண் முன்னுப், பன்னுபற் பல்வ கைச்சீர்ப் பாத்திர குலங்க ளோர்பால், சொன்னமிஃ தென்னு மாகைத் தொழினயம் விளக்கு மேனை, மன்னிய லோகத் தாற்றி வயங்குபாத் திரங்க ளோர்பால். (௩க)

இத்துணைத் தென்று கூற லெத்திறத் தவர்க்கு மொல்லா
வத்தகு பொருள்க ளெல்லா மளப்பில வாகி யென்றும்
0வைத்துல வாக்கி ழிப்போல் வழங்கியோர் குறையு மின்றி
மெத்துசீர் படைத்த வாவ ணத்திறன் விளம்ப லாமே. (௩௨

0 வைத்தவென்னும் பெயரெச்சத் தகரந்தொக்கது.

## வேளாளர் வீதி. வேறு.

சாதுர்(வருணத் தார்முதலோர் தமக்கு வேதா கமம்விதித்த
நீதி நியமந் தளராது நிலேயின் ஞெழுகி யுபவுடலுக்
கேதி லுறுதி தருமுணவா மினிய தானி யாதிதரீஇப்
போதலுக்கும்வேளாண்மைப்புரிதர்பெருமைபுகல்கிற்பாம்.

தூய மரபோ ரிவரெனுநாற் றுணிபு கங்கா குலத்தரெ
னும், வாய்மை விளக்கு முமையம்மை மணிப்பொற் கடகத்
திருக்கரத்தால், மேய தமக்கே யுவந்தளித்த விபனெல்
விருநா ழிகள்பெற்றே, யேய வுழவிற் பெருக்கியுல கெல்லா
மோம்பு வாரிவரே. (௩௪)

ஆண்டு தோறும் விளைந்துவரு' மளத்து மவ்வப் பொ
ழுதேசி, ரீண்டு தேவ ரீத்துவக்கு மின்ப மறியார் கொல்
லெனுநால், பூண்டு விளக்கு மாண்பினராய்ப் புகனல் லற
ங்க டமிழ்புகுத்தி, நீண்டு பரவு பெருஞ்சீர்த்தி நிலவ வாழு
நிலையினரால். (௩௫)

தேவர்—வள்ளுவர். "ஈத்துவக்குமின்பமறியார்கொலுமுடை
மை, வைத்திழக்கும் வன்கணவர்" என்பது திருக்குறள்.

உழுதுண் டெனவோ தியற்சுருதி யுரைக்கிங் கிவரேயில
க்கியராய்ப், பழுதோ ரணுவுந் தமைச்சாராப் பண்பிற் றிக
ழும் பரிசொன்றே, மொழிவே தாக மாதிபுகன் முதல்வன்
சிவனே யெனுமுண்மை, வழிமேற் கொண்டு சிவார்ச்சனை
தான் மாபிற் புரிந்து மகிழ்சிறப்பார். (௩௬)

"உழுதுண்டுவாழ்வாரேவாழ்வார்மற்றெல்லாந் தொழுதுண்டு
பின்செல் பவர்" என்பது திருக்குறள்.

சிவனே பதியென் றுள்ளபடி தெளிந்து சிவதீக் காதி
யபெற், றவிர்மா தவமெய் யன்புரிய ராய மாகே சுரர்க்கன்
பாற், சுவைகூ ரமுதூட் டுறுமாகே சுரபூ சனைநா டொறும்
விதியாற், றவிரா தியற்றிப் பொருள்படைத்த தகுமாண்
பயன்பெற் றுவப்புறுவார். (௩௭)

(வேறு.)

உவணைவேந் துரையு நம்பா வுக்கிர வழுதி யன்பா
லிவர்கள்வாய் மொழியை வேதத் திருமொழி யெனவேநம்பி
யவனுடைக் கார்க ளான்கு மகிழ்தவற் களித்தா லிந்தத்
தவமிகு வேளாண் செல்வர் சீர்த்தியார் சாற்றவல்லார். (௩அ

துதிதிகழ்நம்பிதொண்டத் தொகையில்வாழ்தகையினோரிற்
பதினொரு நாயன் மார்வான் பரவ்வா கீசர் முன்னோர்
முதிர்நலந் தருமெய் கண்டார் முன்னையோ ரிவர்கு லத்தோ
ரிதனின்பேலிவர்குலத்தினிருஞ்சிறப்பிசைப்பதென்னே (௩௯

## வைசியர் வீதி. வேறு,

மன்னவர்தம் பின்னவராய் வயங்குதிறல் வைசியர்மூ வகைச்சி றப்பின், மன்னுதன வைசியர்பூ வைசியர்கோ வைசியரென் மாண்பு வாய்ந்தோ, ரன்னவகை யவர்செய் தொழிலதிகத்தாலாயினுமிக்கவிர்செல்வஞ்சா, ரன்னலனுற் றனவணிக ராம்பொதுப்பே ரடுத்தனர்சி ரறைதற்பாற்றே.

அறநெறியே பொருளீட்ட லகிலமுய வுழவுசெய லாக்க ளோம்பன், முறைதனவை சியர்பூவை சியர்கோவை சியர் செய்தொழின்மூன் றின்னேரி, னிறைதனவை சியர்கவிப்பர் பெருங்குடியாட்சியர் தருமக்கிழவர்நீடு, பொறையர்முதனி றைபெயர்கள் பூண்டனைய பெயர்நலங்கள்பொலிபவாழ்வார்.

மன்னர்முத லோர்நன்கு மதித்திடற்கா மாண்பெல் லாம் வயங்க லாலம், மன்னர்களிற் பானுகுல மதிவேந்தர் தமக்குரிய மகுடஞ் சூட்டு, மன்னலனுற் றிடுந்துய்மைவாய் த்தவரிவ்வணிகரெனமதித்தம்மாண்பு, மன்னவிசைத்தலிற் கவிப்பர்மகுடதனவைசியரென்வயப்பேர்வாய்ந்தோர்.(௯௨)

அறிவுகுணம் பொறையடக்க மனைத்துயிர்க்கு மிரக்க மலி யமைதி வாய்மை, நிறைபுநித முறையொழுக்க நிலை முதல சிரேட்டமெலா நிறையப் பெற்ற, முறைமையினாற் சிரேட்டியெனு முதுபெயர்தம் பொதுவுறவம் மொழிம

ரீஇத்தந், திறனுணைச் செட்டியெனத் திகழ்ந்தநுவுங் குகன் பெயராய்ச் சிறக்கப் பெற்ளுர். (சங)

தமதுதிருப் பெயரானுந் தமதுநிலை திகழுவமர் தகுதி யொன்ளு, வுமைமகிழ்நா யகனென்னு முமாபதியே விதிய ரிமு னும்பர் தம்மை, யமைவுறவைத் தாள்பரம பதியென வே தாகமநின் றறைதலாய்ந்து, முமைபுகழு வருமன்பான் மோதசிவ பூசனையின் முதிர்ச்சி வாய்ந்தார். (சச)

சிவபூசை கனியன்பாற் செயினுமமு தூட்டுமுறை செயுமா கேசர், திவள்பூசை யுஞ்செயினே சிவபூசை பலிக் குமெனத் தேர்ந்து நூலோர்ந், தவிர்காத னனிநீட வத் திருத்தொண் டொருவாம லாற்றி மேலு, மவிர்கோயிற் றிருப்பணிக ளாயவெலா நேயநனி யாகச் செய்வார். (சரு)

அறநெறியி லீட்டுறுங்கா லனுவும்விடா துயர்மலைபோ லார்வத் தீட்டி, நிறைசிவனு லயமுதலா நீடுதிருப் பணிக் கருள்கா ணிமிர்பொன் மேருப், * பொறையளவு பொருளு மனு வெனவளித்தப் பணிநிறைவே போற்றிச் செய்வார், முறைபுரியித் தனவணிகர் மூதகுசீர்த் திறனெவரே மொ ழிய வல்லார். * பொறை—மலை (சசு)

சுருதிமுதல் சுரர்முதலர் தொடரவொணு தொளிர் சோம சுந்த ரேச, வாதனொரு யாமனென வந்தருளும்

பெரும்பேறு வாய்க்கப் பெற்றோ, ரிருவாறி வருஞ்சோதி யிலிங்கேசன் வன்னிகினை றிவற்றி னோடு, மொருவிலருட் சான்றுய்வந் நாறுகலகம் விலக்கியரு ளுதவப்பெற்றோர்(சஎ

இத்தகுசீர் வணிகர்குலத் தவதரித்தோ ரைவர்களு ளம்மா ரென்ப, மெய்த்துறவுக் காணியென விளம்பியற்சீர் வெண்காட்டு விமல ஞான, சித்திநிகழ் பட்டினத்தெந் செல்வர்முத லோரென்று செப்பி லிந்த, வுத்தமவை சியர் குலத்தி னெளிர்சீர்த்தியிதன்மேலு முரைப்பதென்னே(சஅ)

## அரசர் வீதி. வேறு.

பூக்கு முகுந்த னபிசனெனும் பொற்பு வாய்த்துப் புவி யாளும், வாக்கு லத்தி னோர்நான்கு வருணத் தவர்கள் வகைக்கியைய, வுரைக்கு நாலின் விதிவழியே யொழுகு மா செய் திடர்நீக்கித், திருக்கு றுது மனுநீதி திகழ்த்தும் வேந் தர் திறப்புகல்வாம். குலத்தினோராகியவேந்தரென்க. (சகூ)

அரசுக் குரிய படைகுடிகூ ழமைச்சு நட்போ டரணாறு மருவிப் பொலிவி னெஞ்ஞான்று மாறோ ரணுவுஞ் சாராமற் பாவற் கினிய புரிந்தணைத்தெப் பகையும் புகுதா ததிசெய்த் தின், வெருவிப் பணிந்து திறைகொணரும் விதஞ்செய் வீரம் விளம்பரிதே. (ருഠ)

"படைகுடி கூழமைச்சு நட்பா ரணாறு, முடையா னரசருளேறு" என்பது முதலிய திருக்குறள்களின் நிலைமையரென்க.

காட்சிக்கெளிமை முதனலனே கைக்கொண் டுலகர்மகிழ்கூா
நாட்செங்கமலமுகமலர்ந்து நயக்குமின்சொற்புகன்றெவரு
மீட்சி யுறும லாணைவழி மேவிப் பயன்பெற் றுயவிதஞ்செய்
தாட்சிபுரிந்துகுடியோம்பியறத்தினிறுத்தியருள்புரிவார். ()

"காட்சிக்கெளியன்" "இன்சொலாலீத்தளிக்க" என்பனமுத
லிய திருக்குறள்களின் நீதியினரென்க.

நீதி நூல்க ளொருபாங்கர் நிகமா கமங்கள் விரித்துரைக்
கும், போத நிலைய ரொருபாங்கர் புராணு திகளாய் வொரு
பாங்கர், கோறி()லிறைக ளொருபாங்கர் குவியுந்திறைகளொரு
பாங்க, ரோது பலமாண் பொவ்வொருபாங் கொளிரும் வள
0ரத் தாணியெலாம். (ருஉ)

ஆறு நாயன் மார்கடிரு முறைகண் டகில முயவளித்த
வீறு சோழர்*மநுநீதி மேலுந் தெளித்தோர் மாக்கதையின்

---

() இறை—குடிகள் ஆறிலொன்று தரும் பொருள். திறை—அயலாசர் தரும்பொருள். 0 அத்தாணி—அரசர் கொலுமண்டபம்.

* மநுவாகிய முதலரசர் கூறிய நீதிக்கு மேலும் நுணுகியாராய்ந்து மந்திரிகளுக்குத் தெளிவித்து அத்தருமமும் தமது வழியே செல்லும்படி தமது மைந்தாது மருமத்தில் தோாழியுறவூர்ந்த அரசரென்க. மாக்கதை—பெரியபுராணம்.

பேறு விளைத்த வநபாயர் பேறு மிவர்முன் னருள்வேந்த
ரேறுதிறலிக்குலத்தவரேலினிநாமேலுமிசைப்பதெவன்(ருங

## வேதியர் வீதி.

அயன்மா முகத்தின் முற்றோன்றி யவன்றோ 0ளூரு பதத்துதித்த, வியன்மூ வருணத் தார்களுந்தா மேவு கனிட்ட ரெனப்பேணி, நயனு ரவருஞ் சேட்டமுறை நயந்து தமைப்பே ணுறத்தழுவி, யியல்பா ரொற்று மைச்சிறப்புற் றிலங்கு மறையோர் மறுகுரைப்பாம். (ருச)

பலதே வருக்கு மாங்காங்கு முகம னாகப் பகர்தலைமை
நிலைசேர் வேத மோதுவரந் நிகம சார சிவாகமங்கள்
மலையா துண்மைநிலைதெளிக்குமாண்புமோர்ந்து துணிந்திதழி
மிலைமாதேவனேபதியென் மெய்ம்மைவழிநின் றுய்வுறுவார்.

ஓத லாதி யாறுதொழி லுடையா ரொழுக்க நிலைபிறழார்
மாது பாக னடிக்கன்பே வளர்க்குந் திறல்வை திகசைவர்
வேதசிவகாயத்திரி*வாய்விளக்குந்திருவைந்தெழுத்தென்று
போதசிவதிக்காமுறையேபோற்றுமகாஅசைவரிவர்.(ருகு[ம்

---

0ஊரு—தொடை. * வாய்—வாய்மை. காயத்திரியும் ஐந்தெழுத்தும் முறையே போற்றும் மகாசைவரென்க.

(வேறு.)

இந்திறைவே தியர்குலத்தோ ரிலங்கருட்சம் பந்தர்முத லியம்பு வாய்மை, மன்னுபதின் மூவர்திரு மறைஞான சம் பந்தர் மன்ற வாணர், பன்னுபுக ழுமா பதிதீப் பழுத்தவிரும் பிருந்தருளாற் பரவு சைவ, நன்னிலைதேற் றாதத்த நெனி லிந்த வேதியர்சீர் நவில்வார் யாரே. (ருஎ)

## ஆதிசைவர் வீதி.

பிரமனிலு நாற்படிமேற் பெருகுசதா சிவமுகத்திற் பிறங்கு தோற்ற, மருவியொளி சாதிசைவ மாமறையோர் நிகமாக மங்க ளாதி, விரிதருநான் முற்றுணர்ந்து விதிவழி நின் றொருநவாகன் மேதை மேவிப், பரமனைமுப் போதிறை ஞ்சு பரார்த்தமான் மரர்த்தமுதற் பல்கச் செய்வார். (ருஅ)

மறையுரைநாற் சாதியர்க்கும் வழுத்துசிவ தீக்காதி மாண்பு நல்கி, நிறையதிகா ரம்வாய்ந்து நிமலசிவா லயங்க ளெலா நிலத்தின் மல்க, முறைதிகழு *மூன்றங்க மொழி பூசை முற்றுயிரு முதமுற் றோங்க, விறைமகிழப் புரிந்து சிவப் பிரதிநிதி யாயருள்செய் திலங்குவாரால். (ருகூ)

மேதகுமிக் குலத்துதித்தோர் வியன்மணிவா சகர்நாவல் வேந்தர் முன்னு, நாதன்வருக் கத்தனிச்சீர் நாயன்மார்

* மூன்றங்கம்—நித்தியபூசை. உற்சவாதி நைமித்திகபூசை, பிரார்த்தனாதி காமியபூசைகள்.

நால்வர்தொகை நவிலன் போர்முப், போதிருமே னியைத்
தீண்டு புனிதாரு ணந்திமுதற் போற்று வாய்மை, மாதவரா
மெனிலிவர்கள் மாண்குலத்தின் மகிமையெவர் வழுத்தற்
பாலார். (௬0)

இக்குலத்துதித்தோர், மணிவாசகரும், சிவவர்க்கத்தனியடியார்களில், நாவல்வேந்தர் (சுந்தரர்) முதலாக நால்வரும், தொகையடியார்களில் முப்போதும் திருமேனி தீண்டுவாரும், அருணந்திசிவாசாரியரும் முதலிய மாதவராமெனிலென்றியையும்.

## திருக்கோயில்.

முற்புகல்வீ திகளாங்காங் கொவ்வொன்றுப் புறம்புறமே மொய்த்துச் சூழப், பிற்புகலுஞ் சிவத்துவிசர் பிறங்குதிரு வீதிநடுப் பெட்பி னன்ப, ரற்பகனு டொறும்போற்றவர்க்கினிய வருவமுற் றருளி மன்னும், பொற்பினறம் வளர்த்தவள பூர்வவா கீசரர்வாழ் பொன்செய் கோயில். ()

கோயில், சிவத்துவிசர்வீதி நடுவில் மன்னுமென்க.

## திருமடங்கள். (வேறு)

நிகம சாரமாஞ் சிவாகம மசைவற நிறுத்தும்
பகவ னுமமா பதிநிறை பதியரி விதிமுற்
சகல ரும்பசு வடிமையென் னுண்மையோர் தகைசார்ந்
திகவி லாத்திருத் தொண்டர்வாழ் மடங்கள்சூழ்ந் திலங்கும்.

## சிவசரியைத் திருத்தொண்டர்.

சமய திக்கைவாய்ந் தானுருப் புறத்துநேர் தாக்கண்
டமைவி லன்பினாற் றசாய் மலர்கொய்த லாதி
நிமிர்த ரும்புறத் தொண்டெனுஞ் சரியைக ணிறையச்
சுமனத் தாற்புரி சரியையா ளரும்பலர் துதைவார். (௫௩)

## சிவகிரியைத் திருத்தொண்டர்.

மாசி லாதமெய்க் குரவனைத் தேர்ந்தடி வணங்கி
பேசி லாச்சம யம்விசே டம்பெறீஇ யிறைவன்
நேச மைந்தரா யருவுரு வகம்புற நிலைசெய்
தேச பூசனைக் கிரியையா ளரும்பலர் திகழ்வார். (௫௪)

## சிவயோகத் திருத்தொண்டர்.

கிரியை கூர்முதிர்ச் சியிலகத் தருவமே கெழும
விருவ ழிச்செறி காலடைத் தொருவழி யெழுப்பி
புருவ மத்தியா ரமுதுண்டு நடங்கண்டு போற்றி
மருவு சாதக ராஞ்சிவ யோகியர் மலிவார். (௫௫)

## சிவஞானத் திருத்தொண்டர்.

புறம கம்புற மகமெனு விகற்பமில் புனிதத்
திறம ரீஇயிரு வானதீக் கைபெறீஇச் சிறந்து
நிறைத ருஞ்சிவ மேயன வாதமு நேர்கண்
டுறைச கச்சிவ ஞானியர் குழாமவ ணுளரும். (௫௬)

(வேறு)

பூமியெனும் பெண்மணிக்கு நாடெல்லா மவயவமாய்ப் பொருந்தா நிற்கு, மாயதனுட் பாண்டியநா டணிமார்பா மாங்குளவா லயங்க ளெல்லா, மாமணிக ளாலமைத்த பெரும் பதக்க மதனுப்பண் மணியே யாகுங், கோமளமார் சோழ புர மிந்நகரின் மகிமையெவர் கூற வல்லார். (கூஎ)

---

சிவமயம்.

# புராணவரலாறு.



உலகெலாம் வழிபட் டுய்வா னுமையொரு பாகத் தெம்மான்
வலனிலங் கான்கு கேசன் வாமம்வீற் றிருப்ப நந்தி
பொலன்மணி விடைமு டிக்கட் பொலியும்வேத் திரங்கொண்
மலர்மனுத்தவிசின்மேவிவாழ்வதுகயிலையோங்கல். ()[டேத்த

உந்நத நாற்பான் கோடி யோசனை யகல மாவ
தன்னதிற் பாதி யுச்சி யம்புயப் பொகுட்டும்போல
மன்னுசெம் மணிச்சி ருங்கம் வயங்குபர் வொருபான்கோடி
துன்னத னகல மற்றே துலங்குமக் கயிலை வெற்பு. (உ)

சo-கோடி யோசனை உயரமும் அதனிற்பாதி அகலமுமுள்ள அக்கயிலை வெற்பினுச்சியில், தாமரைப்பொகுட்டுப்போல மன்னுகின்ற செம்மணிமயமாயுள்ள சிருங்கம் (சிகரம்) பத்துக்கோடி யோசனை உயரமும் அவ்வகலமுமுள்ளதாய்த் துலங்குமென்க. (ங)

அச்சிருங் கத்தின் கீழ்க்கீ மூவிர்பல மணிநி றத்தின்
மெச்சொரு பதின்ம டங்கு விரிந்துபல் சூழ்நி ரைத்தாய்
நச்சுறு சிகர நண்ண நாப்பணின் றொளிரு மன்ன
விச்சைகூர் சிகரத் துச்சி யிலங்குறுஞ் செம்பொற் கோயில்,

அச்செம்மணிச்சிகரத்தின் அடியில் தம்முடிபொருந்தப் பத்துச் சிகரங்களும், அவற்றின்கீழ் நூறு, அவற்றின்கீழ் ஆயிரம், அவற்றின் கீழ்ப்பதினாயிரமாகக் கீழ்க்கீழ்ப்பதின்மடங்கு அதிகமாக விரிந்து ஒவ்வொருகும் நிரை ஒவ்வொரு ரத்தினமயமாகச் சூழ்ந்து நண்ண அவற்றின் மத்தியில் உச்சியிலுள்ள அச்செம்மணிச் சிகரத்தின்மேல் செம்பொற்கோயில் இலங்குமென்க.

அன்னபொற் கோயில் கோடி யோசனை யகலம் வாய்ந்து
துன்னுமா வாண மொவ்வோர் சுடர்மணி வகையிற் பல்ல
மன்னுறக் கோபு ரங்கண் மானமுன் னுறுப்பெ லாமுந்
தன்னிடைநிறையக்கொண்டுதண்ணொளிபாப்புமெங்கும். ()

இத்திருச் செம்பொற் கோயி லிடைக்கொலு விற்றி ருந்து
நித்தமு மன்பர் போற்ற நிறைபருள் புரிந்து வாழும்
புத்தல ரிதழி வேணிப் புண்ணியன் றிருமுன் போந்தா
ருத்தம முனிவர் பல்லோ ருபயதா மரைப ணிந்தார். (ரு)

பன்முறை பணிந்தெழுந்து பரமனே நாயி னேம்பல்
சென்மமுற் றுலையா வண்ணஞ் சிவநெறி பற்றித் தூய
நன்மைசெய் துய்தத் காய நற்றவம் புரிந்து வாழ்வான்
வின்மலி தலத்தி லொன்று விளம்புதி யெந்தா யென்றார்.(சு)

முனிவரை யருளி னோக்கி முன்னவன் மொழிவான் 'பூமி
தனின்மகிழ் வுறநா மேவுந் தலங்கள்பற் பலவ வற்று

னினியதக் கினைமா *காளி புரகனி யேற்றம் வாய்ந்து
கனி திகழ் தருமா லந்த நன்னகர்ச் சிறப்பு மாங்கண். (எ)

மலிதரு தீர்த்த மாண்பும் வயங்கரு ளிலிங்க மூர்த்தி
நலனுமெய் யன்பார் சூத நற்றவன் கூறுவானவ்
வலமுனி வானைச் சார்ந்தம் மாண்புகேட் டுய்வீ ரென்றான்
குலகுபப்புகன்றானெம்மா †னுறுவர்கேட்டுவகைகூர்ந்தார். ()

திருவடி பணிந்து பல்காற் றிருமுனின் றேத்தி யுய்ந்தோம்
பெருமவென் றரிதி னீங்கிப் பிறங்குமச் சூதற் காண்பான்
பொருவினை மிசத்து வந்தப் புண்ணிய முனிவன் பாத
மருமலர் பணிந்து வேட்கை வயங்குற விளம்பி னால். (கூ)

அத்தகு சவுன காதி முனிவர ரார்வ நோக்கி
யுத்தம முனிவிர் கேண்மி னென்றுபர் சூத னேதும்
புத்தமு தனைய காளி புரமெனுந் திருத்த லம்போற்
றெத்தலங் களினு மேலா யிலங்குமிப் புடவி தன்னில். (க0)

பொருவரு மனைய காளி புரத்தின்மான் மியம்வி ரித்துப்
பிரமகை வர்த்த நாமம் பிறங்குசீர்ப் புராணங் கூறும்
புரைதவிர்த் திடுமக் காளி புரத்தின்சீ ருரைத்து நீவிர்
பரிவுறக் கேண்மி னென்று பகர்ந்தனன் பகருங் காலை. (கக).

---

* காளிபுரம்—காளையார்கோயில். † உறுவர்—முனிவர்.

அனையமான் மியத்திற் சோழ புரத்தின்சி றாங்கொர் பாங்கர்
நனிசிறந் தொளிர்த லாலந் நலமினிக் கூறு வாமென்
றினியவச் சவுன காதி யிருந்தவ ரிருந்து கேட்ப
முனிவர்கள் பரவு சூத முனிவரன் மொழிந்தான் மன்னோ.()

(வேறு.)

இத்தகைய சோழபுரத் திருஞ்சிறப்பை வடமொழியி னெடுத்துத் தூய, மெய்த்தமிழிற் றருகவிது வியன்றமிழ் நாட் டினர்க்குதவி விளைவா மென்றோ, ருத்தமபுண் ணியசில வுரைத்தனனீ தருட்பதிநா லோத லாதி, சுத்தசிவத் தொண்டென்று துணிந்தவன்சொன் மருதுசொலத் தொடங்கி னோனல். (கங)

அறம்வளர்த்த வன்னையுடனபூர்வவா கிசர்திரு வருளி னு விச், செறிவளத்தண் சோழபுரத் திருக்கோயிற் றிருப்பணிகள் சிறப்பச் செய்து, நிறையருட்பெற் றொருவாத நேய மிகு தூயகுண நிலைய னாகி, நறையொழுக்கு மிகழிமுடி நாயகனித் திருத்தலத்தி னயந்தெஞ் ஞான்றும். (கச)

அன்பினரா யடுத்திறைஞ்சு மவரெவர்க்கு முடனெளிதி னருளும் வாய்மை, யின்பால நிறைமுறைதேர்ந் தினிமேலு முலகரெலா மெய்திப் போற்றி, மன்பரம னருள்பெறற்கிம் மான்மியஞ்செந்தமிழ்மொழியின் வரன்மாண்பென்றே, தன் புனிதவுளத்தெண்ணித்தலையளியாலனையனிதுசாற்றினனல்.

இதுபுகன்ற வுத்தமன்வை சியர்குலத்தா னிக்குலத்தா ரெழிற்சோணாட்டின், முதுபதியாங் காவிரிப்பூம்பட்டினத்தி லமர்ந்திருந்த மூதக் கோரித்,துநிவணிக ரனைவருநற் பெருங் குடியாட் சியரென்று தொன்னூல் சொல்லு, மநிதருமிவ் வைசியரைங் காணியிரு பானிரண்டு வயங்கு பட்டம். (கசு)

உடையர்குல சேகரமாபுரம்ராச நாரணமா புரத்தினோடு படர்வீர பாண்டியபு ரம்புகழி டங்கொடுத்த பட்டினஞ்சீர், தொடர்தருதே சிகநாரா யணபுரமே பைங்காணி தொகுமிவ் வைந்தின், மிடைகுலசே காபுரக்கா ணியமொன்பான் பட்ட முறீஇ விளக்கம் வாய்ந்தோர். (கஎ)

பாமிகுமொக் கூருடையார் பகரும்பாற் கிளையாராம் பட்டி னத்துச்,சாமிபெரு மருதூரார் கழநிவாசு சக்குடிகிங் கிணிக்கூர் சாற்று, மாமிகுநற் போசெந்தூர் சிறுசேத்தூர் திருவேட்பூர் வயங்கு கின்ற, தேமனிள நலமொன்பா னுங் குலசே காபுரத்திற் றிகழும் பட்டம். (கஅ)

குலசேகரபுரக்காணியாளருக்கு, ஒக்கூருடையார், பட்டினசாமியார், பெருமருதூரார், கழநிவாசக்குடியார், கிங்கிணிக்கூரார், போசெந்தூரார், சிறுசேத்தூரார், திருவேட்பூரார், இளநலமுடையார், என்னும் ஒன்பதும் பட்டப்பேர்களெனக.

ஒன்பதினிற் றிருவேட்பூர்க் குரைத்தகுல சேகராபு ரத் தொண் காணி, நன்பொதுவா மிராசநா ராயணபு ரக்காணி

நவில்சிறப்பா, மன்புபுரி வீரபாண் டியபுரத்தி லுறையூர் மன் னரும்பாக் கூர்நல், லின்புதரு மணலூரே மன்னூரே கண்ணூரே யின்க ருப்பூர். (கக)

மேற்கூறிய ஒன்பது பட்டங்களில் ஒன்றாகிய திருவேட்பூர்ப் பட்டத்தார்க்கு மற்றெண்மரொடு பொதுவாயுள்ளது குலசேகரபுரக் காணி. தங்களுக்கே சிறப்பாயுள்ளது ராசநாராயணபுரக்காணி என்க.

வருகுளத்தூர் சிறுகுளத்தூர் மாண்கழுநி வாசன்மரு தேந்தி ரம்மா, புரமொருபான் பட்டமுள புகழிடங்கொ டுத்தபட்டி னத்திற் பொற்பு, மருவுசூரு டாமணிமா புர மொன்றே யுரித்தாகி வயங்கும் பட்டம், விரவுறுதே சிகநாரா யணபுரத்திற் குரித்துபுகழ் வேண்டு பாக்கம். (உ௦)

வீரபாண்டியபுரக்காணியாளர்க்கு, உறையூர், அரும்பாக்கூர், மணலூர், மண்ணூர், கண்ணூர், கருப்பூர், குளத்தூர், சிறுகுளத்தூர் கழநிவாசல், மருதேந்திரபுரம்என்னும் பத்தும் பட்டப்பேர்களென்க. புகழிடங்கொடுத்தபட்டினக்காணியாளர்க்குச் சூடாமணிபுரம் என்னும் ஒன்றே பட்டப்பேரென்க. தேசிகநாராயணபுரக்காணியாளர்க்குப், புகழ்வேண்டுபாக்கம், கழநிநல்லூர் என்னுமிரண்டும் பட்டப் பேர்களென்க.

வளர்கழுநி நல்லூரென் பட்டமிரண் டாய்ப்பொலிய மன்னினூரக், கிளர்வணிக ரனையதிருக் காவிரிப்பூம் பட்டி னத்திற் கெழும வாழ்நா, ளளவில்புகழ்ப் பாண்டிநாட் டரு

ணிறைநற் குலவணிக ராட்சிவேண்டி, விளைகழனிச் சோ
ழுட்டில் விறல்வழுதி சென்றணைய வேந்தன் றன்பால். (உக)

வேண்டியனு மதிபெற்று மேவுபெருங்குடியாட்சி விசி
ட்டராகி, யாண்டுறையும் வைசியரை யழைத்துடன்வந்
திளைப்பகற்று மகரந் தன்னி, லீண்டுறுமா விருத்தியவ ரிலங்
கெழிற்சோழுட்டினிற்பெற் றிருந்தாங்கிந்தப், பாண்டியினு
மொன்பதுநம்பரமசிவன்றிருக்கோயில் பல்குமூர்கள். (உஉ)

திருவிளைசை யிரணியனூர் திகழ்மருதங் கூராய சிவக
ணேச, புரமெழினே மம்மாற்றூர் புகழிருப்பைக் குடிவே
லன் குடிபொற் சூரை, பரவுவயி ரவன்புரமொன் பானுமவர்
பரம்பரையிற் பணிமேற் கொண்டே, யருளுறுமா தொடர்
காணி யாட்சிமுறை புரிந்துவர வளித்தான் மன்னே. (உங)

உயரிளைசைக் காணியின ரொக்கூர்பட் டினசாமி யோது
சீர்த்திச், செயன்மலியுந் திருவேட்பூர் சிறுசேத்தூர் பேர
செந்தூர் கிங்கி ணிக்கூர், நயமருவு பெருமருதூர் கழனிவாஅ
சக்குடியா நவில்பேர் மேவி, யிபனூருமில் விருநான்கா
யிலங்குமெழிற் பட்டப்பே ரிபைந்து ளாரால். (உச)

திருவேட்பூ ருடையசென்த் திகழ்பட்டத் தார்க்கிளை
சைத் திருந்து காணி, தருவாய்மைப் பொதுவிரணி யூர்மரு
தங் கூர்க்காணி தமதா மென்ப, வருணேம மாங்காணி யாள
ரிள நலமுடைய பட்டத் தாராம், பெருமாற்றூர்க் காணியி
னர் பேறுறையூ ரருப்பாக்கூர் பிறங்கு கன்னூர். (உரு)

மணலூர்மன் னூர்கருப்பூர் வண்குளத்தூ ரிவ்வேழு
வளர்பட் டத்தா, ரெனுமிருப்பைக் குடிக்காணி யினர்சூடா
மணிபுரப்பே ரெழிற்பட் டத்தார், கனிவேலன் குடிக்காணி
யார்கமழ்நீ கல்லூராங் கவின்பட் டத்தார், அணிசூரைக்
குடிக்காணியார்புகழ்வேண் டியபாக்கமாம்பட்டத்தார்.(௨௬)

போற்றுவயி ரவன்கோயிற் புகழ்க்காணி யாளர்சிறு
குளத்தூர் பொற்சி,ரேற்றமரு தேந்திரபு ரங்கமழ்நீ வாசலென
வியம்பு மூன்று, தேற்றமிகு பட்டத்தார் செப்பியவிவ் விவ
ரணமாண் சிறப்பெஞ் ஞான்றுந், தோற்றமுறு மாசோம சுந்
தரநா யகனிந்தத் தூய்மை மேவி. (௨௭)

வருவணிகர் மரபினிலோர் மைந்தனுக்கு மாமனென
வந்து முன்னாட் பரவுமவ ரவர்குடிப்பேர் பட்டப்பேர் காணி
யின்பேர் பகர்ந்தா னென்று,திருவிளையா டற்கதையுந் தேற்
றிடுமிவ் வணிகர்களிற் றிகழு மேன்மை. மருவுமிருப் பைக்
குடியாம் வளர்காணி யிற்சூடா மணிபு ரப்பேர். (௨௮)

மருவியொளிர் பட்டமிவை வணிகமணி களிற்சிந்தா
மணிப்பேர் வாய்ந்த, வொருபுருட னருந்தவத்தா லுதித்தி
லகு மைந்தரின்முன் னூறுசி ரேட்டன், பொருணிறையும்
வெள்ளையப்ப பூபன்முனிக் கதைதருமா புகன்றசிலன், வரு
பனையன் றனையர்கண்மூ வருமுடனு யவ்வாறே மகிழ்ந்து
ரைத்தார். (௨௯)

தனையர்கள்சிந் தாமணிசிர் தருமாதப் பன்னருணை சலப் பேர்ச் செல்வ, ரனையரறம் வளர்த்தவனை யபூர்வவா கிசர்திரு வருளி ஞலே, மனைவிமகார் குலந்தழுவ வளர்பொருள்கன் மிகமல்க வண்குபோன், புனைவுறுமவ் வளத்தினுமேற் புகழ் பெருக நீடூழி பொலிந்து வாழ்க. (கூ0)

இத்தகுபுண் ணியசில ரிசைத்ததுநற் சிவதரும மென் பதொன்றே, நத்துமிவ ருளத்தென்று நயந்தரவீற் றிருந் தருளு நாத ஞணை, யுய்த்ததுமா மெனமேற்கொண் டுரைத் திடுமிந் நூற்பெயரவ் வுமைகோன் மாண்சீர்ப், புத்தமுதார்ந் துய்யுநிலை புரிந்தருளுஞ் சோழபுர புராண மென்க. (கூக)

இத்தொகைய புராணவகை யிவையதேவ துநிநாடு நகா மேர்க்கு,மத்தகைய புராணவர லாறுதலந் தீர்த்தநல னருளு மூர்த்தி, மெய்த்தருசிர் வாணிசெயல் விசயபுர சோழபுர விசேட மென்றோர், பத்துளவா மிவையைஞ்ஞூற் றிருபா னோந் தாய்விரியும் பாவாலென்க. (கூஉ)

இன்னதிருச் சோழபுரத் திருங்காதை தமிழுலக ரின் புற்றேந, நன்னருற நவின்றளித்தா நாவலர்க ணனிபரவு நலங்கனெல்லா, மன்னுறுசிர் வன்றொண்ட மாதவதேசிகர்ப் போற்றி வருமாணுக்கன், றொன்னலனூர்காரைநகர்ச் சொக்க லிங்க தேசிகனுந் தூயன் மாதோ. (கூகூ)

ஆகத் திருவிருத்தம் களகூ.

# தலவிசேடம்.

உலகெலாமும் போற்றிபன்மாண் பொளிருஞ் சோழ
புரமெனும்பேர், மலரித் தலச்சீர் வடமொழியின் வபக்கு
புராணவர லாற்று,நிலைமை புணர்த்தா மினிபனைப நிலவுதலத்
தக் கருணலங்க, ளலகில் லனமுற் றுரைப்பரிதே யறிந்தாங்
கொருவா றுரைகிற்பாம். (௧)

அருளா னுலகெலாமுப்வா னமல னுறையா றுன்காடல்
புரிசீர் மதுரை யெண்டிசையுட் புனித மீசா நிசைமூன்றுப்
பிரிபோ சனைதூ ரத்தயர்க்கு விளங்கு நனை லெத்தலமும்
பொருவிலாதுசோழபுரம்புவிபிற்சிறந்து பொலிதருமே (௨)

அமலன், ஆடல் புரி சீர் முதலிய ஒப்பில்லா அற்புதமகிமைக ளுடையவாள், துவாதசாந்த மதுராநகரம் திருக்கயிலைமுதலிய திருத்தலங்களைவற்றினுஞ் சிறந்ததே. இத்தகுசிறப்புவாய்ந்த மதுரா புரியின் எட்டுத்திசைகளுள் ஈசானதிசை சிறந்ததாகும். இப்பெருஞ் சிறப்பினதாகிய ஈசானதிசையின் மூன்றுயோசனை தூரத்திலுள்ள சோழபுரம் எத்தலங்களினுமேலாய்ச் சிறந்து விளங்குமென்க.

அகில முபகல் லறம்வளர்த்த வன்னை யபூர்வ வாகீசர்
நிகில நலந்தந் தனவரத நிவாச ராகி நிலவுதலாற்
சகல ரிவர் களுமிந்தத் தலஞ்சார்ந் திட்ட சித்திகளைப்
பகலுநிறைபப்பெற்றின்பேபருகிச்சிறந்துவாழ்வுறுவார் (௩)

சோள புரமென் றிருநாமஞ் சொலக்கேட் டவர்சொன்
னவர்கண்டோர், மீளுறுது வசித்தவர்கள் விழைவிற் புரிநல்

லறம்பலவு, நீளு மாண்பு நிறைபொருளு நீதி முறைசேர்
தருமின்புங், காள மிடற்றோ னருள்வீடுங் கலந்து வாழுங்
கனம்பெறுவார். (௪)

கேட்டவர், சொன்னவர், தரிசித்தவர். வசித்தவராகிய நால் வகையினரும் முறையே அறமும் பொருளும் இன்பமும் வீடுமாகிய நான்கும் பெறுவரென்க. சோழ—சோளவென்றுயது.

விரவு சோழ புரத்திருந்து விரதசில ராயொருநாள்
மருவுதவஞ்செய்வாரேனை வயங்குதலங்கடொறுஞ்சென்று
புரையுறுது பல்லாண்டு புலன்களொடுக்கி யுடல்வருந்த
வரிது புரியு நற்றவப்பே றனைத்தும் பெறுவார் சாதமிதே.()

உலகர் பருவ முறைக்கியைய வும்பர் பலர்க்கு முபசாரத்
தலைமைகூறும்பொதுவியல்புசார்ந்துஞ்சிவனேதியேயனென்
றிலைவிலுண்மையுரைவேதமோதுசாலைதாபனஞ்செய் [தீற்
திலகப்புரப்போரிருமைநலனெல்லாமெய்தியின்புறுவார். (௬)

வேதபாடசாலை தாபித்து அம்முறைவிளங்க வளர்த்துவருவோர் இம்மை மறுமை நலனெல்லாம் பெற்று வாழ்வாரென்க,

சிவனே பரம பதியேனைத் தேவர் நாரா தியர்சிவ
ரவனு ளடிய ரெனும்வாய்மை சிறப்பி னறைசி வாகமமப்
பவனு ரருளே முற்கொடுணர் †பாவனால யந்தாபித்
தவிர்பூசனைசெய்விப்பவரின் பனைத்துமார்ந்துநனிவாழ்வார்.

†பாவனஆலயம்—பரிசுத்தசிவாலயமாகிய சிவாகமபாடசாலை தாபித்து அங்குப் படித்துவருகின்ற சிவதீக்ஷாவான்களாகிய மாசே

சுரர்களைச் சிவனாகவே பாவித்து அம்மந்திரங்களாற்பூசித்து அன்ன மிடுதலாகிய மாகேசுரபூசனை செய்விப்பவர்கள், இம்மை மறுமை யின்பமும் மேல்முத்தியின்பமும் பெற்று வாழ்வாரென்க.

சிவபூசனையி னும்மதுமுற் றிருத்தொண் டுறுநி தெரித் தருண்மா, தவர்பூ சனைமே லெனவனைய தகைசால் குருபூ சனைநினைமுந், நிவண்மா மடால யத்தியலச் செயுமெய்யன்ப ரிகநலமுந், றவிர்வாழ்வினரா யமர்ந்தொருவா வமலமோக்க நிலைபெறுவார். சிவபூசனையினுமேலானகுருபூசைஎன்க(அ)

அசா மெனினு முற்றவத்தா லானுக் கனியு மலர்தரு மிவ், வசா மோம்ப லெவற்றினுமே லாமென் றனைய நந்தவ னத், திசையு மணக்குந் திருப்பணியிச் சோழபுரத்திற் செய் வாரெண், டிசைபோற் றருஞ்செல் வம்பெருகத் திகழின் பனைத்துஞ் சேர்ந்தொளிர்வார். (கூ)

மிருக வருக்கத் துட்பிறந்தும் விமலன் முடிக்காட் டின் சுவைப்பா, றருநன்னலத்த தெனப்பசுக்க டமைநன்றோம்பி யக்திறைபான், மரபி னளிக்கும் பணிமுதல மல்கப் புரிமெய் யன்புடையா, ரரிய நலங்க ளெல்லாம்பெற் றளவா வின்ப வாழ்வுறுவார். (கo)

மன்னு சோழ புரத்திலறம் வளர்த்தா ளெனுந்தன் பெயரினுக்கம், மன்னை காட்ட லாலிவணவ் வறங்கள் புரியி னென்றனக்த, மென்ன நினைந்தன் பருளீர்ப்ப வீண்டி வளர் பல் லறங்களெலா, நன்ன ரியற்று செல்வர்பெறு நலங்க ளிவையென் றஃப்பாரார். (கக)

ஆகத் திருவிருத்தம் கஅச.

# தீர்த்தவிசேடம்.

(o)

தீர்த்தம் வேணியிற் சேர்த்த சிவனருள்
கூர்த்த சோழ புரநலங் கூறினோம்
சீர்த்த வித்தலத் திற்றிகழ் தீர்த்தத்தி
னோர்த்த மேன்மை யினியிசைப் பாமரோ. (க)

வாணி லாவு மலரயன் ஞவில்வாழ்
வாணி முன்ன ரபூர்வவா கீசுர
தாணு பூசனை தான்செயத் தந்தது
சேணு லாவுசீர்ப் பாரதி தீர்த்தமே. (உ)

நாம டந்தை நலந்திகழ் வாவியிற்
றேம டங்குறத் தூய்மையிற் றோய்ந்தவர்
தாமு டன்பெறு வார்நலஞ் சார்தருந்
தேம ணந்தொளி ருந்திரு வாக்கரோ. (ங)

காண்ட றீண்டுதல் கைக்கொடுட் கொள்ளுத
லாண்டு மூழ்கல்செய் தாரரு ணான்முறை
பூண்டு கேட்டல்சிந் தித்தல்பு லன்றெளி
வீண்டு நிட்டைபெற் றின்புற வாழ்வரால். (௪)

மாத மும்முறை மாரிபெய் மாமுகில்
பேது றுதொரு வாறு பிறழினுஞ்
சீத நீர்வள மென்றுந் திகழ்தரும்
போத நாமகள் கண்ட புனற்றடம். (ரு)

வாணி தீர்த்தமென் ருேதினர் மாண்மனம்
பேணி னேர்கண் டவர்படி பேற்றினர்
தாணு வாரு ளான்முறை சார்வரால்
பாணி லாவுநாற் பாதப் பயனரோ. (௬)

மணிவி மக்கள் வளர்பொரு ளாதியா
மெனைய வேண்டி முழுகினு மித்தட
னனிப ளித்திடு நாடுவின் போகங்கள்
நினைபு மூழ்கினு நேருற நல்குமே. (எ)

இன்ன வாணி யிலஞ்சியி னுடொரு
நன்னர் மூழ்கி நலம்பெற னற்றவ
முன்ன ராற்றினர்க் கல்லது முற்றுரு
தன்ன நீர்தின மாடுவ ரான்றவர். (அ)

பிறவி முகைய ராயினும் பெட்புறீஇ
முறையி னுரு நியதியின் மூழ்கினக்
குறைபு முற்றெருழித் தேபினுங் கோதற
நிறையும் விற்பன ராக்குமந் நீர்த்தடம். (௯)

வேண்டு றும்பொருள் யாவையு மேதக
வீண்டு டன்றருஞ் சிருனர்க் கித்தடந்
தேண்டி வந்துதோய்ந் திட்டநற் சித்திகள்
பூண்டு ளார்பலர் மேலும் புகல்வதென். (௧0)

---

ஆகத் திருவிருத்தம் ௧௯௪.

# மூர்த்திவிசேடம்.

―――o―――

தவளாம் புயம்விற்றிருந்தருளுந் தகுசீர் வாணி தன்பெயரா
லவிர்மா தீர்த்தகலனொருவா றறிந்தாங்கிசைத்தாமளப்பருமச்
சிவமா தலத்தி லனவரதஞ் சிவமேதாவீற் றிருந்தருள்செய்
பவனு மபூர்வ வாகீச பரம மூர்த்தி நலம்பகர்வாம். (௧)

வேத வேதாந் தாதியெலாம் விண்டு வாதி விபுதரெலாம்
பேத மேக மெனப்பிணங்கிப் பேதுற் றிடர்கூர் சமயரெலா
மோத வரிதா யுன்னரிதா யொளிர்சுத் தாத்து விதசைவ
சித்தித்தாந்திகட்கினிதாய்த்திகழும்பிரமமெனுஞ்சிவமே. (௨)

நிலையார் பொருளொன் றேயென்று நிராலம் பாதி வேதாந்தஞ், சிலவே கூறு மதுபிரம சிவமொன்றேயென் றுணர்த்தலலா, விலவே றென்று மென்றஃதன் றெனுமெய் பலவே துக்களினு, லுலைபா துணர்த்தி நிறுத்திடுசித் தாந்தத் திலங்கு மொளிர்சிவமே. (௩)

நித்த மாகி நின்மலமாய் நிருவி கார நிர்த்தொந்த
சுத்த மாகி நிராலம்ப சோதி யாகி நிட்களமாய்ச்
சத்து சித்தின் பாகியுமா தார மாகி யாதேய
வத்து யாகிநிறைந்தெங்கு மருவி யருள்செய்வதுசிவமே. (௪)

உருவமருவமுருவருவமெல்லாங்கடந்தொள்ளொளிமயமாய்
விரவு சிவமே யுருவாதி மேவு மூலகர் தனைநேர்கண் [ளாற்
பொருவில் வழிபா டெளிதியற்றி யுய்கென் றிரங்குதிருவரு
பொருவிலருளேயுருவாகப்போந்து தலந்தோறிருந்தருளும்.

அகள சிவமே யுலகருய வருளாற் சகள நிலைகாட்டி
யிகலி லாது வயங்குதலா லிரண்டு நிலையு மெய்யொன்றே
பகலி லாம லுருகிவிரி பண்பு மதுவே கடினமதாங் [ரோர்.
தகவும்போலாமலதுயர்வு தாழ்வின்றெனப்போற்றுவர்சான்

இன்ன முறையிற் பற்பலவடி வினனு யாங்காங் குலகருய
மன்னு கோயில் கொண்டருளி வயங்கும் பரம சிவனெங்குந்
துன்னு தலங்க டமின்மேலாய்த் துலங்குசோழ புரத்தன்பர்
முன்னுமிலிங்கமேனியனுப்முதமேவுறவிற்றிருந்தருளும். (எ

ஒளிரு மகேச வுருவையந் ததன்மேற் சாதாக் கிய
மைந்தாய், மிளிரு மிவற்றுட் பூசாதி விழைவி னேர்செய்
துலகுப்வா, னெளிதி விலங்குங் கருமசாது தாக்கி யம்மா
மிவ்விலிங்க, மளிசெ யுருநான் கருநான்கி னுப்ப ணமர்ந்தா
சருட்ருமால். (அ)

மகேசரவடிவம் (உரு) இம்மகேசதத்துவத்தின் மேலுள்ளது
சாதாக்கியதத்துவம். இது, சிவசாதாக்கியம், அமூர்த்திசாதாக்கியம்.
மூர்த்திசாதாக்கியம், கர்த்திருசாதாக்கியம். கர்மசாதாக்கியமென்னு
மைந்துவகைத்தாம். இவ்வைந்தில் உலகெலாம் பூஜாதிகளால் வழி

பாடுசெய்தற்கெளிதாய் விளங்கும் கர்மசாதாக்கியமாகிய இவ்விலிங்க மூர்த்தியே, பிரமவிஷ்ணுருத்திரமகேசுர உருவம் நான்கிற்கும், விந்து நாதம் சத்தி சிவமாகிய அருவம் நான்கிற்கும் மத்தியதாய உருவும் அருவுஞ்சேர்ந்த ஒருவடிவினதாயமர்ந்து அருள்தருமென்க.

சாற்று முருநான் கருநான்குந் தானே யெனும்வாய் மையைநேரே, தேற்று மனைய வருவுருவாய்த் திகழு மிலிங்க மெனிலிந்தப், போற்று மூர்த்தி தருநலங்கள் புகலு 'மாண்பெப் புலவோர்க்கு 0 மாற்ற வரிதே யொருவாறிங் கறிந்த வளவி னறைகிற்பாம். 0ஆற்ற—மிகவும். (௯)

ஒருவில் வளஞ்சால் சோழபுரத் துயிரா யொளிருந் திருக்கோயில், பெருக வனைய வுயிர்க்குயிராய்ப் பிறங்கு மபூர்வ வாகீச ,ரருளை விழைந்தாங் களிபெருக வடித்தொண் டாற்றுந் திருத்தொண்டர், மருவி நாளும் புரிதொண்டின் வகையெஞ் ஞான்று மலிதருமே. (௧௦)

(வேறு.)

வைகறை யெழுந்து தூநீர் மரபினின் மூழ்கி யன்பான்
மெய்கமழ் திருவெண் ணீறு விரியுமுத் தூளஞ் செய்து
பொய்கடி சிவதீக் கைச்சீர் பொலியமுப் புண்ட ராதி
செய்குல வைந்தெ ழுத்துச் செபநின கியமஞ் செய்து. (௧௧)

குளிருநீர் குடத்தெ டுத்துக் கொண்டுபொற் கோயி லெய்தி
மிளிர்திரு வலகிட் டாங்கு மெழுக்குவன் சுதைக்கோ லங்க

ளொளிர் திருவிளக்கானெய்யாதியவற்றாலுவப்பிற்செய்வோ
பளகிரிசாலோகாதி பதம்பெறீஇ யினிது வாழ்வார். (௧௨)[ர்

அலகிடல், மெழுகல், கோலமிடல், விளக்கிடலாகிய நான்குஞ் செய்வோர், முறையே சாலோக சாமீப சாரூப சாயுச்சியமாகிய நான்குபதங்களும் பெற்று வாழ்வாரென்க.

கவிலுமந் நியம சில ராய்த்திரு நந்த னஞ்சார்ந்
தவிர்தருந் தூய பூங்கூ டையின்மல ராய்ந்தெ டுத்துச்
செவிதிகழ் மாலை யிண்டை செறிதொடை கண்ணி யாதி
திவள்பணிசெய்யுஞ்சிலர் சிவமணைஞ்சேர்ந்துவாழ்வார். (௧௩)

தூயரு ளபூர்வ வாகி சுரொனுந் திருப்பே ரோர்கால்
வாயுள முறச்செ பித்தோர் வழுவறும் வாக்கு முன்னு
மேயசெல் வங்க ளெல்லாம் விரவுறப் பெற்று வேந்த
ராயவ ரெவரும் போற்று மருங்கவிச் செல்வ ராவார். (௧௪)

திருவபி டேகஞ் செய்வான் செம்பொனற் குடங்க ளாதி
தருபவர் நிறைய மின்பத் தனிக்கட லினைத்து வாழ்வார்
பரவுகன் மணமார் தூப பாத்திரந் தந்தி யற்று
முரியாணவத்திறுற்றலொழித்துமெய்வாழ்வுசார்வார். (௧௫

பெருகொளி *மாதி பாதி பிறங்குபொற் பாத்தி ரச்சீர்
வரிசைதந் தவர்மெய்ஞ்ஞானம் வயங்குசீர் பெற்றுவாழ்வார்
விரியொளிப் பளித தீப மிளிர்மணிக் கலன்க டந்தோ
ரொருவருஞ்சிவத்துவப்பேறுற்றுவாழின்பஞ்சார்வார். (௧௬

மகாதீபாதிகள் விளங்குதற்குரிய பொற்பாத்திர வரிசைகளா வன, தீபக்கால், ஒன்றன்மேலொன்ருகப் பல அடுக்குகள்சேர் மகா தீபம் நாகதீபமுதலியனவாம். பளிததீபம்—கற்பூரதீபம்.

ஒலியதி தூரத் தோரு முணர்பெரு மணி0கைக் கண்டை
நிலவொலிக் காளந் தாரை நிகழ்திருச் சின்னந் தாள
மிலகுமின் னிசைசெய் நாக சின்னமத் தளமுன் னீந்தோர்
குலவுநா தாந்த மாண்பு கூடுமின் புற்று வாழ்வார். (கஎ)

*கோளகை மகுடந் தோடு குண்டலங் கவச முந்நூ
லாளொளி மதாணி யார மங்கதங் கங்க ணங்கள்
வான்மதிச் சுடிகை நாகா வரணமுன் னணிக டந்தோர்
நாண்மதிமுடியோன்சோதி ரூபாய் நயந்துவாழ்வார். (கஅ)

சுற்றுபொன் மதிலெ டுத்தோ ருட்புறப் பகையின் சூழ்ச்சி
முற்ெறுழித் தருணி லத்தின் முடியா சாகி வாழ்வார்
பொற்றிணி மண்ட பாதி புரிந்தவர் பிறவி வெப்ப
மற்றிளைப் பாறி யெம்மா னருணிழல் வாழ்வு சேர்வார்.(கசு)

கிளரொளி நிறைக ருப்பக் கிருகநல் லத்த மாடம்
வளர்மகா மண்ட பஞ்சோ பனமண்ட பங்கள் செம்பொ
ஞெளிமணி வகையிற் செய்தோ ருரைமுறை சாயுச் சியாதி
விளையுமின்பொருவாநான்குமெய்ந்நிலைபெற்றுவாழ்வார்.(உ0

---

0கைக்கண்டை—கைம்மணி, *கோளகை—சிவலிங்ககவசம்.

குலமணி நிகழி ராச கோபுரங் கருப்ப வின்மே
னிலவொளி விமான மாதி நிமிர்தரப் புரிந்தோ ரிம்மை
நலன்முழு தார்ந்து மேன்மே னற்பதம் புகுவோர்க் கேணி
யிலகுறக்காட்டியேற்றமிறைமைசானிலையில்வாழ்வார். (உக)

முறையறம் விழைந்தோர்க் கீயும் மூலபண் டார மென்றே
யறையொளித் தரும ரூப மாம்விடை யிரண்டு செம்பொ [ன்
னிறைமணிகளிற்செய்திந்தோர் நிகழ்த்துமத்தருமமெல்லா
குறைவறு மேவல் செய்யுங் குலவர சாகி வாழ்வார். (உஉ)

மருப்பிரண் டாயி ரத்த வளவயி ராவ ணம்மு
ருருப்பா லூர வெள்ளி யுருமணி பொன்வே றங்கம்
விருப்புறப் புரிவெள் ளானை விமலனுக் களித்தோர் வானத்
திருப்பவன்முன்னேரேவல்செயவரசிருந்துவாழ்வார். (உங)

வெள்ளிபொன் மணிக ளாற்செய் விழுமிய காம தேனு
வொள்ளறம் வளர்த்த வன்னை யூர்தா வளித்தோ ரிம்மை
யெள்ளரு மன்ன மாதி யெண்மையின் பார்ந்து மேலு
முள்ளன வெல்லாமாந்தி யுமையருட் பெருக்கின் வாழ்வார்.

இம்மையில், அன்னுதிசயனந்தமாகிய எண்போகங்களும் அனு பவித்து, மறுமையில் மேலுமுள்ளனவாகிய சுவர்க்காதிபோகங் களும் அநுபவித்து அதன்மேலும் உமையருட்பெருக்காலாகும் முத்தியின்பமும் பெறுவரென்க.

பரியரி யன்ன முன்னும் பற்பல்வாகனங்க டந்தோர்
மருவுவ ரவ்வவ் வின்ப மாசற நன்கா ராய்ந்து
புரிகுளோதனங்கீ ரான்னம் பொருவின்முர்க் கான்னமாடம்
விரவுசம் பீர நாளி கேரமுன் னுவி ளம்பும். (௨௫)

கீரம்—பால். முர்க்கம்—பருப்பு. மாடம்—உழுந்து, சம்பீரம்—எலுமிச்சம்பழம். நாளிகேரம்—தேங்காய். இவைமுதலியவைகள் சேர்த்த ஓதனவர்க்கம்—வர்க்கான்னங்களென்க.

ஓதன வர்க்க மண்ணித் தறுசுவை யபூப வர்க்கம்
மோதக மாடா பூப முர்க்கநன் மதுவர்க் கங்கள்
சீதள கனூபங்க டிருந்துசந் திராபூ பங்கள்
கோதறு திரட்டுப் பால்சட் குலிசுவை நானு கோணம்.(௨௬)

அண்ணித்தல்—இனித்தல். மாடாபூபம்—உழுந்தாலாகிய வடை. கனூபம்—இட்டலி. சந்திராபூபம்—தோசை. சட்குலி—முறுக்கு, நானுகோணம்—தேங்குழல்.

பலவகைக் கதலி சூதம் பலவுமா துளைºந ரந்தம்
மலிதரு திராட்சை†வெள்ளின் முதற்கனிவருக்கந் தெங்கின்
நிலவிள நீரி ளங்காய் நிறைவகை நிவேதஞ் செய்தோர்
வலியதற் போத நீத்து மன்னுபே ரின்பின் வாழ்வார்.(௨௭)

---

º நரந்தம்—நாரத்தை. † வெள்ளில்—விளா.

(வேறு.)

இத்தகுயிர்த் தருமமெலா மியற்றிடுபற் பலர்பெறும்பே றினிதி சைத்தா, மத்தரும மத்தனைய மளப்பில்பொரு ணனி யன்னி யன்னி நல்கி, மெய்த்தகுமப் பணிநிறைவே மிகநோக் கி யுடனுளும் விருப்ப மேன்மேல், வைத்தியலப் புரிவிக்கு மாதகுபே ரன்புநிறை மாபி ஞேர்க்கு. (௨௮)

அறம்வளர்த்த நாயகிபா லபூர்வவா கீசர்தா மளவாச் செல்வ, நிறைபெருக்கு நீடாயு ணிலவுறுசற் புத்திரர்க ணீடு வாழ்க்கை, முறையளித்துப் பேரின்பு முழுதருண்மென் ெருசொல்லான் மொழிய லாமத், துறைவகுத்தின் னின்ன வெனச் சொலலெவர்க்கு மரிதெனினுஞ் சொல்வதென்னே.

பரைதரும வர்த்தனியெம் பரமனரு வரதமுமிப் பல்வ ளஞ்சா, லரியதிருச் சோழபுரத் துவந்தருள லோர்ந்திவண் வந் துவகை மிக்கு, மருவியொரோர் பணிபுரிந்து வரம்பெற் றோர் பற்பலரவ் வகைமுற் றேத, லரிததனாற் சிலசரித்தி ரம்மேயீண் டறிந்தவா றறைகிற் பாமல். (௩௦)

---

ஆகத் திருவிருத்தம் ௨௨௪.

# சரஸ்வதிப் படலம்.

தருமவருத் தனிபாகத் தானுவபூ ருவவாகி
சுரர்மகிமை யொருவாறு சொற்றனமேற் பாரதியப்
பரமனருட் பங்கயத்தாள் பணிந்தேத்தி வரம்பெற்ற
சரிதமவ னருளியக்குந் தரத்தினள வுரைத்திடுவாம் (க)

ஐந்தொழிலு நினைப்பளவி லாற்றுபரா னுலகமெலாந்
தந்திடுமத் தொழிலியற்றச் சதுமுகனைத் தந்தவனை
யுந்தெழிற்சத் தியலோகத் துறைதரவைத் தவனையிபக்
குந்திறல்சேர் சத்தியெனக்கொடுத்தனன்வாணியையவற்கே.

அந்நிலையி னமர்வாணி யகிலமுமாங் களித்திடுங்கான் [ர்ச்சி
மன்னுணர்வொவ் வொன்றுமேல் வாய்ப்புறுமை வகையுணா
யின்னிலவு சிவர்களிற் பகுத்தறிவோ ரேற்றமுளார்
துன்னுமவருண்ணினைவுபிறர்தெரியச்சொலல்வேண்டும். (ங)

அன்னதனுக் கின்றியமை யாததுவாக் காமனைய
நன்னிலையச் சிவரெலா நண்ணுறுமா புரிதொழில்செ
யின்னிலைநாம் வாகீச னெனநிகமா கமங்களெலாம்
பன்னுபரா மேசனடி பணிந்தருளாற் பெறவேண்டும். (ச)

அப்பரனை யெப்பதியி லடைந்திறைஞ்சிப் பெறுதுமென
வொப்புறநின் றோர்காலை யுலகுருவ னும்புருடற்

றெப்புவியிற் பஃறலங்க ளிலங்குமுறுப் பாயடங்கத்
திப்பியமா மதுரையொன்றே யடங்காது0திகழ்தருமேல். (௫

ஒதுபுரு டன்றுடற்கு ளடங்காம லுச்சிகடந்
தேதிகழ்பன் னிருவிரன்மே லிலங்குதலாற் றன்பெயர்து
வாதசாந் தம்மெனவே மறைமுதனூல் வழுத்துறுமம்
மேதகுசீர்த் திருப்பதியே யெவற்றினுக்கு மேலாமால். (௬)

இனையதிருத் தமிழ்மதுரை யெண்டிசையுட் டேயதிலே
தனைமருவித் திகழ்தருமீ சானதிசை தனிலிலங்கும்
புனிதநிறை தருசோழ புரமதனி லனவரத
நனியருள்செய் வாகீசர் நளினமல ரடிபோற்றி. (எ)

நினைத்தநலம் பெறுதுமென நிச்சயித்தா ளுறுதியிது
வெனத்திகழுஞ் சோழபுர மெய்தவழிக் கொடுசென்று
வினைத்துயர்திர்த் துயிர்க்கருள விமலனுவந் துறைதலங்க
ளனைத்துமடைந் தாங்காங்கு மமலனடி பணிந்தேத்தி. (அ)

எங்காட்டுஞ் சிறந்தொளிரு மெழின்மிகுபாண் டியனுடா
நன்னாட்டு வந்தறுபா னான்காட்டு நவிற்றுதொகை
யின்னாட்டு தன்னருட்சி ரிபல்சோம சுந்தரன்பால்
வின்னாட்டு கயற்கணியொ டுறைமதுரை மேவினளால். (௯)

தன்னருட்சிரிவியல்பை ௬௪ திருவிளையாட்டுத்தொகையினல் நாட்டுசோமசுந்தரனென்க.

---

0 மேலாகத்திகழ்தரும் என்க.

அனையதிரு மதுரைநக ரணிபணிபாய்ச் சூழ்ந்திலங்கும்
புனைமறுகொவ் வொருசூழற் புதியவிதழ் நிரையாக்கொ
ணினைதருதா மரையாக நாப்பணுறு பொற்பொகுட்டா
மினியதிரு வாலவா யெனுந்திருக்கோ யிற்புகுந்தாள். (கo)

மதுரைநகர், தாமரையாக, அதன்பொகுட்டாகிய கோயிலென்க.

அத்திருக்கோ யிற்குயிரா யனைத்துயிரி னிதயகம
லத்துறைதல் விளக்கியாங் கவிர்சோம சுந்தரன்றன்
புத்தலர்ச்சே வடிபணிவான் புகழ்பொற்றா மரைபடிந்து
சித்திவிநா யகற்பணிந்து சிந்தைமுற் றுறப்பரவி. (கக)

உலகெலாஅந் தந்தருளு மொருதாயங் கயற்கண்ணி
மலரடிகள் பணிந்தேத்தி மகிழ்சோம சுந்தரன்றாள்
பலமுறையும் பணிந்துதிரு முன்னின்று பரவிப்போந்
திலகுதிருச் சோமபுர மேநோக்கி வருகின்றாள். (கஉ)

(வேறு,)

அன்புநின் றுந்த வருண்முன்வந் தீர்ப்ப வதிவிரைந்
தேகுறுங் காலை,முன்பல சகுன முதந்தா விருபான் முழங்கு
பைங் கிள்ளைகள் பூவை, யென்பன சிவசங் காமகா தேவ
விந்துசே காகங்கா தரவென், றின்புற மொழிதல் கேட்டு
மெய் யன்பா லிதுநன் னிமித்தமென் றிசைத்தாள். (கங)

உவகைமீ தூர வடுத்துவந் தெல்லை யுடனில முறப்ப
ணிந்தொளிமிக், கவிர்மணித் தூல லிங்கசோ புரங்கண் டஞ்

சலி சென்னிமே லாகப், புவியினிற் பலகா லிறைஞ்சியெம் பெருமான் பொற்றிருக் கோயி லுட் புகற்கு, நவில்விதிப்படி யே நானமுன் னுவ நவிற்றியாங் கெய்துவா னயந்தாள். (கச

அனையகோ யிலின்மேற் றிசையிற்காற் கடிகை யள வுறு தூரஞ்சென் றவனோர், நனைமலர் வாவி நினைத்தமாத் திரத்தி நலனெலாம் நிகழ்தரக் கண்டா, வினையதற் புத மோ யாவையும் படைக்கு மிறையவன் சத்தியா மிவட்கப் புனைதடந் தவளாம் புயங்கள்காட் டுதலப் பூவைக்கா தனந் தால் போலும். (கரு)

அருணவம் புயங்கள் பலவுட னடுத்தாங் கவிர்தலவ் †வயனவ னன்னை, மருவுநன் மாண்பும் வாணிதன் கொழு நன் மாமியை யடுத்தவர் மகிழ்கூர், தாவிபைந் துலகீ ரென் செய லோர்ந்தித் தகையினீர் கணவன்மா மிகளுக், குரியரா யிணங்கி யொழுகிநற் பயன்பெற் றுய்மினென் றுணர்த்தலு மொக்கும். (கசு)

அளிநிரை யொருங்கே யொலித்தெழு மோசை யாங் குடன் சார்சுறி யாக,வளர்பல தவளைக் குரல்கள்கைத் தாள மாலுற வெண்சல சத்தோர், ஒளிர்தரு 0 மாாள மிலங்குற வுடனுங் கோர்வரா லுறுதல்கண் டுவகை, விளையநம் பரற்கு நாம்புரி வீணை வியன்பணி போன்மென வியந்தாள். (கஎ)

---

† அயனும் அவன் அன்னையுமென்க. அன்னை—இலக்குமி.

மாாளம்—அன்னம்' அது அவ்வாணியையும், வரால்மீன் வீணையையும், தவளைக்குரல் தாளவிசையையும், வண்டிசைசுதியை யும் ஒத்தலால் அத்தொகுதியைக்கண்டு நாம் புரியும் வீணுகானத் தொண்டுபோலுமென வியந்தாளென்க.

ஆங்கொரு வெண்டா மரைச்சிறு சங்க மலையெறி புன லுற வளியாற், பாங்கலர் தனிற்சார் தாவுற விதய பங்கய வெண்மலர் மிசையத்,தேங்கொளிப் படிக லிங்கபூ சனையாந் திகழ்தரு மந்தரியாக, வோங்குறு செயலாக் கண்டன ளுவ கை யுததிதோய்ந் துறுதியுற் றனளால். (கஅ)

வெண்டாமரையில் ஒரு சிறுசங்கமானது, தன்மீது அலையாலெ றியப்படும் புனலுறவும், காற்றினல் பக்கத்துள்ள அலர்கள் தன்மேற் சாரவுமிருத்தலை இதயபங்கயமாகிய வெண்மலரில் விளங்கும் படிக லிங்கபூசனையாகிய அந்தர்யாகச் செயலாகக்கண்டு உவகையுற்ரு ளென்க. அந்தர்யாகம்—உட்பூசனை.

சடப்பொரு ளாமித் தடஞ்சிவார்ச் சனையின் றகுதிநேர் க்காட்டவு நாமிவ், விடத்தினிற் பாணித் திடுதலொல்லா தென் றெண்ணிவல் விரைவின சமித்தத், தடத்தினிற் பூதி கண்மணி தரித்துத் தன்கருத் துதவுசங் கற்பந், தொடுத்து ரைத் தந்நீர் நாபிமட் டாகத் துன்னியஞ்சலிசிரஞ்சூடி (க௯

பாணித்தல்—தாமதித்தல். தன்கருத்துஉதவுசங்கற்பம்— தான் கருதியவெல்லாம் தரவேண்டுமென்ற சங்கற்பம்,

கருதுபிராணா யாமமுஞ் சகளீ கரணமுங் *கண்செவி
வாய்மூக்,குரியவேழ் துவார முடிவா கீச ரொளிரறம் வளர்த்
தருளுமைபூக், திருவடி நிறையன் பொடுபராய் மூழ்கித்
திகழ்பல வகையருக் கியங்கள், புரிபதன் மேனு மூழ்கினா
னச்சிர் புகல்விதி யாவையும் போற்றி. (உ0)

களையிவர்ந் நீரந் துடைத்துட னுதலிற் கருதுவெண்
ணீற்றொளி கவினக், குருமலி தருவெண் பட்டுடீஇப் பின்
னுங் குளிருமா சமனஞ்செய் துடலிற், பரவுமுத் தூள னம்
புரிந் ததன்மேற் பகர்திரி புண்டரம் பரித்துத், தருமனுச்
சகித மிபற்றனுட் டான சந்திவந் தனமுறை தந்தாள். (உக)

பசுத்துவ நீக்கிச் சிவத்துவப் பேறு பயக்குநீ றினித
ளிந் தானு,மிசைத்ததன் னருள்வாய்ப் பிலக்குகண் மணியு
மினிதணி கெனுமுறை பேணி, நசைக்கொளப் புனைந்தைந்
தெழுத்துருப் பலகா னவிற்றியஞ் சலிகாஞ் சென்னி,
மிசைத்திகழ் தரச்சென் றனையநீர்த் தடத்தின் மிளிர்தரு
கீழ்கரை யதனில். (உஉ)

லிங்கரத் தமலன் றிருத்தளி கண்டாங் கடுத்தவன் பிர
ணவா கார, துங்கநன் மேனி காண்டலு மன்பு தூண்ட
வல் விரைந்தணி துன்னி,செங்கம லத்தாள் பன்முறை பணி
ந்து சிரத்தினிற் கரத்துணை சேர்த்தி, யெங்கணு யகவெண்
டிங்கள்வே ணியதா யிபமுகத் திறைவவென் றேத்தி. (உ௩)

---

*பிராணாயாமமும் சகளீகரணமும் கருதிச்செய்தெனக.

உலகெலா முனைமுன் பணிந்துவேட் டனமுற் றுறப் பெறீஇ வாழ்தல்கன் டேழை, யிலகுநின் மலர்த்தா ளிறை ஞ்சினன் வேட்ட தெய்துமா வருள்கென வேண்டி, நலன ருள் வாகி சுரர்திருத் தளியி னண்ணுபு தூலலிங் கத்தைக். 0 குலமுனர்ப் பணிந்தக் கோபுர மதனுட் குலவவீற் றிருந் தருள் புரியும். 0 குலம்—கோயில். (உச)

அருளதி கார நந்திதே வன்று ளன்புறப் பணிந்தருள் பெற்றுண், மருவியைங் கரத்தெம் வள்ளலை வணங்கி மன நிலை நிறைதா வழுத்தித், தருமயிற் கான்சே வடிபணிந் திடப நந்திமுன் சார்ந்தடி தாழ்ந்து, விரியறம் வளர்த்த வன் னைதாள் பணிந்து மேதகு துதிபல விளம்பும். (உரு)

(வேறு.)

உலகெ லாமு மீன்றருளி யோம்பு தாய்நீ யாதலினு, விலகு நாத னிடம்பிரியா தினிய மொழியா லெவ்வுயிர்க்கு, நலன்முற் றருள்கென் றுரைத்தியக்கி நவைதீர்த் தருள்வ துன்னியல்பே, யலகி லாநல் லறம்வளர்த்த வனையே யெனை யேன் றருள்வாயே. (உசு)

மலரின் மணம்போற் சிவனருளாய் மன்னிப் பிரியா தமர்ந்திருந்து, முலக மாண்பெண் வடிவினுறு முதனுக் கே ற்ப வரன்புருட, நிலைய னுக நீயிரிவை நிலையுற் றருள்வ தோர்ந்தடைந்தே, னலகி லாநல் லறம்வளர்த்த வனையே யெனையேன் றருள்வாயே. (உஎ)

தக்கன் றவத்தாற் றடக்கமலச் சங்கா யெடுப்ப மக
ளாகி, மிக்க குடிலை நீயெனவு மிளிர்தா ரகமே யுருவாநன்,
மக்க ளளித்தாய் தக்கன்மகண் மைமாற் றினையென் பதும்
வயக்கு, மக்க ணளித்தா ளறம்வளர்த்த வனையே யெனை
யேன் றருள்வாயே. (௨அ)

தடாகத்துள்ள கமலத்தின்மேல் பிரணவாகாரமாயுள்ள சங்கமாயிருந்து, அத்தக்கன் எடுத்தபின் மகளாகி, அதனால் நீ பிரணவரூபி என்பதும், பிரணவரூபமக்களைத் தந்தாயென்பதும், அச்சங்கம் மகளாய் மாறினதுபோல நீயும் அத்தக்கன்மகளாயிருந்தமை மாற்றினையென்பதும் வயக்குகின்ற அனையே, அக் கண்அளித்து ஆள் அனையே என்க. அக்கண்—அந்த உண்மைஞானம்.

சகல புவனங் களுக்கருமோர் தாய்நீ யிமையத் தட
மலரின், மகளிற் போந்து முற்றுயிருண் மலர்தோ றிலங்கு
மாண்விளக்கி, தருமவ் வாசு மேனையுஞ்செய் தவத்துக் கிர
ங்கி யருள்புரிந்தா, யகில நலஞ்சா ரறம்வளர்த்த வனையே
யெனையேன் றருள்வாயே. (௨௯)

மலையத் துவசன் மனையொடுசெய் மகாங்கி மூவாண்
டொருமகளாய், நிலவித் திரிலோ கமும்புரக்கு நிலையு மடுத்
தார்தொல்லழுக்கு, விலகித் தூய்மை பெறவளிக்கும் விமல
வாழ்வும் விளக்கினையா, லலகற் றொளிர்நல் லறம்வளர்த்த
வனையே யெனையேன் றருள்வாயே. (௩௦)

அனையே நீ, எவ்வித அழுக்கும் நீக்கி எவற்றையும் சுத்தமாக்கும் அக்கினியில் மூன்றுவயசு மகளாய் விளங்கியதனால், நீ மூவுலகும்புரக்கும் நிலையும், அடுத்த சீவர்கட்கு அநாதிமலவழுக்குநீங்கிச் சுத்தநிலை பெறும்படி அளிக்கின்ற வாழ்வும் விளக்கினையாதலால் எனையேன் றருள்வாயென்க.

பரம னருளே யவனிடத்தோர் பன்னி யெனச்சார்ந் தளப்பிலுயிர், மாபி னோம்பு தாய்நினக்கம் மகிழ்ந னளித்த திருநாழி, வருநெல் லதுகொண் டேயாவும் மல்கப் புரந்து கற்புநிலை, யருமை தெரித்தின் னறம்வளர்த்த வனையே யெனையேன் றருள்வாயே. (௩௧)

படியோ ரிரண்டே தந்துலகெ லாமும் பாலிக் கென யாவு, முடையா னுரைத்த துறுமோவென் றுலக மலையா தகபரத்தி, நெடிதா ரின்பே யுயிர்க்கருள்வா னெல்வி யாசத் தளித்தனனென், றடியார்க் குணர்த்தி யறம்வளர்த்த வனை யே யெனையேன் றருள்வாயே. (௩௨)

யாவுமுடைய சிவபிரான், உயிர்களுக்கு, இகபோகபரபோகமாகிய இருவகையின்பங்களை யருளும்படியே, இரண்டுபடிநெல்லென் வியாசத்தால் (முகாந்திரத்தால்) தந்தனனென்றுணர்த்தி என்க.

செழியன் மகளாய்த் திருப்பாண்டிச் செம்பொன் னாடு செழித்தெவற்றும், விழுமிதாக மணிமகுட மிலங்கின் னருட் செங் கோலுலக, முழுதுந் திகழ வரசுபுரி முதல்வி யாயம் முறைதெரித்தா, யழிவி லாநல் லறம்வளர்த்த வனையே யெனையேன் றருள்வாயே. (௩௩)

பரவு முயிருக் குயிராகும் பரமற் குயிரா யுளத்தமர்ந்து, விரவு பிரபஞ் சோர்முகனுய் விரியைக் தொழிற்கூத் தன வாதம், புரிய வொருபா ளின்ருட்டும் பொருளி லருள்பா சத்தியெனு, மரிய சிவையே யறம்வளர்த்த வனையே யெ னையேன் றருள்வாயே. (௬௪)

சிவ *ரெவர்க்கு மெஞ்ஞான்றுந் திருத்தி வளர்க்குந் திருவருளே, மேவ வளிக்குந் தொழிலேநீ மேற்கொண் டமர்கின் ருயேழைக், கோவி லருள்செய் கென்றறியா துரைத்தேன் யாவும் பொறுத்தரு, மாவ ளிடத்தார்க் தறம்வளர்த்த வனையே யெனையேன் றருள்வாயே. (௬௫)

என்று துதித்தா ளனையதுகேட் டெமது கண்ணிற் றிகழ்வாணி, நன்று நினது துதிமகிழ்ந்தோம் நாடி நீயீண் டுற்றசெயல், மன்றி னடஞ்செ யெம்பெருமான் மகிழ்ந்து முடிக்கு நம்முனநீ, நின்று துதிசெ யிப்பதிக நிகழ்மாண் பொருளோர்க் கிசைப்பவர்கள். (௬௬)

அன்பி னெடுகேட் டின்புறுவா‡ரஞர்தீர்ந் திகவாழ் வினைத்தார்க்கே, யின்ப விடு மருவுவர்நீ யெண்ணி யாங்கு வாகிச, 0முன்ப வடிசார் கெனவருள முதமீக் கூர்ந்து துதிவாணி, பின்பும் பலகாற் பணிந்துவிடை பெற்று ளா ன்மு னுற்றுளால். (௬எ)

---

* எவர்க்கும் அளிக்கும் என்றியையும். ‡ அஞர்—துன்பம். 0 முன்பு—வலி.

(வேறு.)

திருமுனஞ் சேர்ந்தாள் செறியொளிப் பிழம்பாய்த் திகழ்சிவ லிங்கநேர் கண்டாள், பரவச மானாள் பன்முறை பணிந்தாள் பாவுமின் பக்கடல் படிந்தா, ளுரைசெய்வாய் குழற நாத்தழு தழுப்ப வச்சிமேற் செங்கைகூம் புறநின் றிருவருக் கரிதா யெழுந்தசெஞ் சோதி யிலிங்கமோ விவ் வுரு வென்றாள். (௩அ)

நின்னரு ளதனாற் பிறர்க்குவாக் களிக்கு நிலைபெற வேண்டியிங் கடைந்தே, னென்னொரு வாக்குங் குழறுகின் றதுவா கீசநின் 0திருமுனமுன்னாட், பன்னுநான் மறைக்கா னத்திலென் யாழைப் பழித்துடைந் தொழிதரப் பணித்தா, ளின்னிசை மொழியா னின்னருட் டேவி யிங்கென்வாக் குடைந்த தென்செய்கேன். (௩௯)

0 திருமுனம் குழறுகின்றதென்றியையும். மறைக்காட்டில் நின்தேவி தனது இன்னிசைமொழியால் என் யாழைப்பழித்துடை யச்செய்தாள். ஈங்கு—(வாக்குக்கு ஈசனாகிய உனது) திருச்சந்நிதி யில் என் வாக்குடைந்தது என்செய்வேன் என்க.

எனக்கொரு செயலின் றெவையுநின் செயனீ யின்ன ருள் செயினலா லேழை, நினைத்தலு மிசைமோ நினையருச் சித்து நின்னரு ளாற்பிறர்க் களிக்கு, மனைத்துவாக் குறு வா 0 வினைப்பித்தாய் நீயே யண்ணலே யபூர்வவா கீசா, வினைத்துய ரொழித்தீண் டருள்கெனப் பாவி மேலருச் சனைசெய விரைந்தாள், (௪0)

---

0 வினைப்பித்தாய்நீயே—என்னை நினைக்கச்செய்தவனும்நீயே.

பூசனைக் குரிய பொருளெலா மீட்டிப் போற்றுசிர் 0மொழுகத் தைதங்கை, யிசனைக் குகனே யறம்வளர்த் தவனே யின்புற முன்புபூ சித்தாங், காசனைத் தொழிய வபூர்வவா சிச னருட்டிரு முன்னலித் தாக, நேசனை யாது வடதி சை நோக்கி நிலவுறவிருந்திது நிகழ்த்தும். 0மொ—யானை(சுக

சிரமிசைக் †குட்டி யஞ்சலித் தியற்றித் திகழ்கண பதிகுரு வணக்கங், 0கரைபிரா னுயா மம்புரீஇச் *சகளீ கரணமுன் புரிகர நியாச, மாபினிற் புரிந்தைம் பூதசுத் தியு மேல் வயங்குமங் கந்நியா சமுஞ்செய், துரியதன் றேகஞ் சிவமய மாக்கன் டொளிர்திரு தயகம லத்தில், (சஉ)

†குட்டியும் அஞ்சலித்தும். கணபதி வணக்கமும் குருவணக்க மும் இயற்றி என்க. 0 கரை—சொல்லப்படுகின்ற, * சகளீகரண முறைப்படி முன்பு கரநியாசம்புரிந்து பின்பு பூதசுத்தியும் அதன் பின் அங்கநியாசமும் செய்தென்க.

தேசுறு படிக லிங்கமுன் பாத்தி யாசம னுர்க்கியஞ் சேர்த்தவ், வாசன மூர்த்தி மூலமுன் மனுக்க ளான்முறை யகத்துறப் புரியும், பூசனை முடித்துப் புறத்தினுஞ் செயுமா புரிந்தருள் கென்றுவின் னைப்பித், திசனவ் வானை தந்த தா நினைந்தாங் கின்புறீஇப் புறத்தகஃ தியற்றும். (சஙு)

பாத்தியா சமனுர்க் கியக்கண்முன் றுளிகூர் பசும் பொன்வட் டகைகளிற் றுபித், தார்த்தநீர் பூசைப் பொரு ளிடஞ் சுத்தி யாத்தெளித் தெண்சமக் காரஞ், சேர்த்திநற்

திருமஞ் சனகட மணிபொன் செறிமண மலர்முதற் செறித்
துச்,மிர்த்தமிர்த் தியுஞ்ச யம்மநு வபிமந் திரித்தமு தம்
மயக் திகழ்த்தி. (சச)

திருமஞ்சனகடத்தில் நவமணி பொன் மலர் முதலியவைகள் சேர்த்து,மிர்த்தியுஞ்சயமந்திரத்தால் அபிமந்திரித்து அத்திருமஞ் சனநீரை அமிர்தமயமாக்கி.

தன்0னடிக் கிழி தயமல ரிட்டா சனஞ்சிவ மூர்த்திதா பித்து, முன்னுதற் றிலகஞ் சந்தனத் தியற்றி முக்கண்மந் திரம்புகன் றுச்சி, யின்னலர் மூலத் தணிந்துதற் சிவமா யெண்ணுபு சங்கிதா மநுக்கள், மன்னுநன் மனத்தாற் செபித்து று *மான்ம மந்திர சுத்திகள் வயக்கி. (சரு)

0 அடிக்கீழ் மலரிட்டுச் சிவாசனமும் இருதயத்தில் மலரிட்டுச் சிவமூர்த்தியும் தாபித்தென்க. * ஆன்மசுத்தியும் மந்திரசுத்தியும் விளக்கியென்க.

மனுநிறை விசேட வருக்கிய நீர பூர்வவா கிசர்வாழ் சோதி,நனிநிக ழிலிங்க முடிதெளித் திலிங்கசுத்தியம் முறை யினு னவிற்றிப், புனிதநற் குடிலாந் தாசன மநுக்கள் புகன் றுநன் மலர்நிறை காரெஞ், சினிலுயர்த் 0தடிக்கி ழிட்டுமே லும்பூ வியைகாம் புருநடு வெழுப்பி. (சசு)

அடிக்கீழ்—சிவமூர்த்தி திருவடிக்கீழ். பூவியை காம்—புட்பம் நிறைந்த அஞ்சலிகாம். அதனைப் புருவநடுவரையுயர்த்தி அதனுள் அச்சிவமூர்த்திவந்ததாகப் பாவித்து அச்சிவலிங்கமூர்த்தியில் நிவே சித்துஎன்க. நிவேசித்தல்—சேர்த்தல்.

ஒளிர்சிவ மூர்த்தி நிவேசித்†தஞ் சலிமே லுச்சிசேர்த் தூர்த்துவ முகமுன், மிளிர்முக மைந்தைம் முவிழி யைந்து வெண்பிறை நதிமுதல் விளங்கிக், குளிருமைஞ் சடிலம் பதின் கர மாதி குலவுதன் பளிங்குருப் பதினு, றிளமைநல் வயசார் வித்தியா தேக மேத்துமம் மூர்த்தியி னமைத்தே. (சஎ)

*மேலும் புஷ்பம்நிறைந்த அஞ்சலிகரத்தை உச்சிவரை மெல்ல உயர்த்திநிறுத்தி அதனுள், ஈசானமுதலிய ஐந்துமுகங்களும் ஐம் மூன்றுவிழிகளும் ஐந்து மதிநதிமுதலியனவணிந்த ஐந்துசடைகளும் பத்துக்கரங்களும் பளிங்குமயமான திருமேனியும் பதினாறுவயசு யௌவனப்பருவமும்பொருந்தியவித்தியாதேகம் வந்ததாகப்பாவித்து அதனை அச்சிவமூர்த்தியிலமைத்தென்க.

விரைமலர் நிறையஞ் சலிகாஞ் சிரமேன் மென்மெலத் துவாதசாந் தத்திற், பரிவுற வேற்றி யக்காத் துட்பல் பானு கோடியினொளி பரப்பும், பொருவினிட் களவி யாபக சிவ மன் புகுந்ததா நினைந்துசெங் காத்தை, புருநடு நிறுத்திப் பன்மதி யொளியும் புகுந்துடன் கலந்ததா நினைந்து. (சஅ)

பின்னரப் புட்பாஞ் சலிகர மெல்லப் பிறங்குமச் சதா சிவ னேந்து, சென்னிகே ரிழிச்சிச் சத்தியோ சாத சிரத்துறு பிரமாந் திரத்தின், முன்னெறிப் புகுந்த நிட்கள சிவமா மூர்த்திமா னிதபதா மரையின், மன்னிவீற் றிருப்ப தாகக் கண் டுடன்†சு வாகதங் கிலவென வழுத்தி. (சகூ)

0 நிஷ்களசிவமாகிய மூர்த்திமான் என்க. மூர்த்தி—தேகம். மூர்த்திமான்—அத்தேகத்தையுடையவன். † சுஆகதம் கில—நல்வரத்து அல்லவா.

மேலுமிவ் விலிங்கத் திருந்தருள் கென்று வேண்டியா வாகன மாதி, நாலுமாங் கியற்றி யழைத்தவொ டிருத்த னய ந்துநேர் முகஞ்செய றகைத, லேலவைந் தருக்கி யம்புரிந் திதயா தியநியா சம்மிலிங் காதி,சாலுமுத் திரைபாத் யாசம னூர்க்கி யம்பத முகமுடி தந்து. (ருo)

அழைத்தலாகிய ஆவாகனம், இருத்துதலாகிய தாபனம், நேர் முகமாக்கலாகிய சந்நிதானம், தகைதலாகிய சந்நிரோதனமென்னு நாலும் ஆங்கு—அந்தந்தமுறைப்படி இயற்றி, அதன்பின் ஐந்துசிரங் களிலும் ஐந்து அருக்கியமும் இருதயாதிநியாசங்களும் இலிங்கமுத் திரை முதலியமுத்திரைகளும் புரிந்து, பாதங்களில் பாத்தியமும், முகங்களில் ஆசமனமும், சிரங்களில் அருக்கியமும் தந்துஎன்க.

விரவுநிர் மாலி யங்கழித் தொருபூ மிளிர்திரு முடிய ணிந் தெண்ணெ, யரிசிமா 0வரிச னப்பொடி நெல்லி யரும் பொடி பஞ்சகௌ வியமே, யிரதவைந் தமுதம் பலபஞ்சா முதமே விபம்புநான் முறைகண்முற் றியைந்த, சுரபியி னறும்பாலாடைசார் தயிர்நெய்சுவைமதுவொடுசருக்கரையே

0 அரிசனம்—மஞ்சள். இரதஐந்து அமுதம்—ரசபஞ்சாமிர்தம். அது, பால் தயிர் நெய் சர்க்கரை தேன் ஒன்றாய்ச் சேர்க்கப்பட்டது. நூல்களில் சொல்லிய விதிமுழுதுமியைந்த சுரபி என்க. சுரபி—பசு.

இச்செய்யுளிற்றொடங்கி அபிஷேகத் திரவியங்கள் வரிசையாகச் செய்முறை கூறப்படுகின்றன. அவையாவன, முதலாவது நல்வாசனைகள்சேர்ந்த எண்ணெய். (சுகந்ததைலம்) உ. மாப்பொடி கரைத்தநீர். ௩. மஞ்சட்பொடிநீர். ௪. நெல்லிப்பொடிநீர். ரு. பஞ்சகௌவியம். ௬. ரசபஞ்சாமிர்தம். எ. பலபஞ்சாமிர்தம். அ. பால். ௯. தயிர். ௰. நெய். ௧௧. தேன். ௧௨. சர்க்கரைகரைத்த நீர்.

திங்கரும் புறுநீர் சூதமா துளைமுற் றிகழ்பழங் களினுறு மிரத, மோங்குதெங் கிளநீர் விரைவகை பலசேர்ந் தொளிர் கறுஞ் சந்தனக் குழம்பு, பாங்குவில் வாதி மலர்களின் வடித்த பனிதரு புனிதநீர் வில்வங், தேங்குநீர் சுவர்ணோ தகமணி யுதகந் திகழ்மண மலர்நிறை யுதகம். (ருஉ)

௧௩. கருப்பஞ்சாறு. ௧௪. மாம்பழ மாதுளம்பழமுதலிய பலவகைப் பழங்கள் தனித்தனிபிழிந்த சாறுகள். ௧௫. இளநீர். ௧௬. பலவாசனைசேர்ந்த சந்தனக்குழம்பு. இவ்வாறு தைலாதிசந்தனாந்தமாகிய பதினாறும் அபிஷேகித்து, இவற்றின்மேல் பனிநீர், வில்வோதகம் சுவர்ணோதகம், ரத்னோதகம் சுகந்தபுஷ்போதகமாம். வில்வோதகம் வில்வங்களை முன்னரே ஒருபாத்திரத்துள்ள நீரில் சேர்த்துவைத்து அதற்குரிய சமஸ்காரஞ்செய்யப்பட்டநீர் என்க. சுவர்ணம் ரத்தினம் புஷ்பங்களும் இப்படியே அமைத்தன என்க.

சகத்திர வேக தாரைகள் கவைமாத் தருமருப் புதகநற் சங்கி,னகத்துறு மளக முருத்திர கலச மதிவிசே டார்க்கியோ தகமு,மிகத்தனித் தனியே மருப்புகன் முட்டி விளம்புமன்

னவற்றிடை யிடைப்பல், வகைச்சுவை நிவேத னம்புகை
தீபம் வளைத்துமுன் னரும்பினும் வயங்க. (௫௩)

*சகஸ்திரதாரை ஏகதாரை கவைமிருகக்கொம்பினுள் அமைத்த நீர். சங்கத்தமைத்தநீர், ருத்திரகும்பநீர், விசேடார்க்கியநீராகிய இவைகளை மிகுதியாகத் தனித்தனியே அந்தந்த மந்திரம் புகன்று அபிஷேகித்து இடைஇடையில் பலவகைநிவேதனங்கள் முன்னும் பின்னுந் தூபதீபங்கள் வயங்கப் புரிந்துஎன்க. அடுத்தசெய்யுள் முதலில் புரிந்து என்னும் சொல்லை இங்குக்கூட்டுக.*

புரிந்துடன் றிருவொற் றுடைமென் மெலவி சம்புலர்
பகைமுறை போற்றித், திருந்துவெண் ணீறு சந்தன மறுகு
நிகழ்தரு மக்சுதை வில்வம், பெருந்தகை யிதழி யாதிய
வணிந்து பிறங்குபீ தாம்பர 0துவபம், விரிந்தொளிர் மணிப்
பூண் சுவண*முப் புரிநூல் விதங்கள்பற் பலமுறை மிலேந்து,

*0 துவயம்—இரண்டு. இரண்டுவஸ்திரமே அணியவேண்டும். ஒன்றுமாத்திரம் அணியப்படாது. * முப்புரிநூல்முதலிய பற்பல விதங்களாகிய ஆபரணங்களை முறையாகமிலேந்துஎன்க.*

தொகையின்முப் பானு முபிரு பானுன் கேழொடுமைந்
தெனத் துதைந்து, நிகழுமூ வகைத்தத் துவங்களுக் கதிப
சிவனுக்கு வணக்கமென் றேதுந், தகுமது வொடுபுட்பாஞ்
சலித் திரயந் தந்துபின் றண்டமே முண்டம், புகலும்வத்
திரபங் கிளிலயாங்கம் போற்றுபோ காங்கபூ சனைகள் (௫௪)

௩௬-என்னும் தொகையினவாய, ௨௪. ௭. ௫. எனத்திகழும் மூன்று வகையினவாகிய தத்துவங்களுக்கு அதிபதியாகிய சிவனுக்கு நமஸ்காரம் என்னும் பொருளுடைய ஆத்மதத்வாதிபதயே சிவாயநம, வித்யாதத்வாதிபதயே சிவாயநம, சிவதத்வாதிபதயே சிவாயநம என்னும் மூன்றுமந்திரங்களுடன் இருகரங்களிலும் சுகந்தபுஷ்பங்களை நிறையக்கொண்டு அஞ்சலியாக சிரமேலுயர்த்தித் திருவடியில் அப்புஷ்பங்களைத் தூவுதலாகிய புஷ்பாஞ்சலிக்கிரியையும் தந்துஎன்க.

மனுமுறை புரிந்தாள் பவித்திரஞ் சாத்து மாண்புடன்
வயங்கினர் குடிலை, யின்முனம் வளர்த லெனநறுந் தூப
மினியசெய்த் தீபமே றிலக்கி, யனகனு னனத்தாஞ்சிரத்துமா
சமனார்க் கியமளித் தவிர்பல வகைய, புனிதநன் னிவேத
னங்களெண் சமக்கா ரங்களும் புரிந்ததன் மேலும். (௫௬)

எண்சமஸ்காரம்— நிரீக்ஷணம், புரோக்ஷணம், தாடனம், அப்பியுக்ஷணம், நானத்திரயம், திக்குபர்தனம், அவகுண்டனம், தேனுமுத்திரை என்க.

மிருத்தியுஞ் சயமந் திரத்தபி மந்தி ரித்ததன் விடத்து
வம் விலக்கி, வாத்திரு வமுத மாக்கியெம் பெரும வயங்கு
மிந் நிவேதன வகைபா, தாத்திலுண் டருள்கென் றன்புரை
பலகாற் றந்ததற் போதமத் தாணு, காத்தளித் திடலோர்த்
தனையவை யாவுங் கனிவினை வேத்தியங் கண்டாள். (௫௭)

நிவேதிக்கின்ற அன்னமுதலிய பொருள்களிலுள்ள விஷத்தன்மையை நீக்கி அமிர்தமயமாக்குவது மிர்த்தியுஞ்ஜயமந்திரமென்க. நித்தியதிருப்தனாகிய சிவபிரானுக்கு அன்னாதிகளை நிவேதிப்பதன் கருத்து, நிவேதிக்கின்றவர்கள் தங்களிடத்துள்ள தற்போதத்தையேற்றருளுகவென்று பன்முறை பரிந்துவேண்டி அதனை அத்தானுவின் திருக்கரத்திற் கொடுத்தலாமென்க. இவ்வாறு நிவேதித்தற்கு முன் தூபங்கொடுத்தல், அப்புகைபோலுங் கரியமலவலியை நீக்கியருளுகவென்று வேண்டுங்குறிப்பும், தீபங்கொடுத்தல் அவ்வொளிபோலும் சிவஞானந் தந்தருளுகவென்று வேண்டுங்குறிப்பும், கற்பூரதீபங்கொடுத்தல் அக்கற்பூரம் அவ்வொளிமயமாதல்போலச் சிவத்துவப்பேறு தந்தருளுகவென்று வேண்டுங்குறிப்புமாமென்க.

முன்னரா சமன மருக்கியம் புரிந்தாண் முதிர்நறுந்
தூபதீ பங்கள், பின்னருந் தந்தா னிரைநிரை யாகப் பிறங்
குமா தீபமுற் பேசு, மின்னுப சார வகையெலா மியற்றி
யிருந்திரி சுபர்னமென் றிலக்கி, நன்னரின் 0வேதம் போற்
றுசிர் வில்வ நவையறத் தெரிந்தெடுத் ததனே. (நிஅ)

0 வேதம் திரிசுபர்னம் என்று விதந்துபோற்றும் சிறப்பினதாகிய வில்வமென்க.

ஆயிரத் தோரெட் டருட்சிவ நாம மன்பினோர்ந் துரைத்
ததி விரைகள், மேயாற் 0பமரத் தொவ்வொன் றனைத்தே
விரைவுறும் மென்மெல விமலன், றுபசே வடியி லணிந்துடீ

னிடக்கைத் துறைமலர் கொடுவலக் காத்தி, னேயமார் கரு
கண் மணிவடங் கொண்டு நிமல*வைந் தெழுத்துள நிலவும்.

0 பமாம்—சந்தனக்குழம்பு. அதனில் வில்வங்களை நனைத்து நனைத்து விரையாமல் மெல்லமெல்ல அருச்சித்தனனென்க. * ஐந்தெழுத்தை உள்ளத்தில் தியானமுறையுடன் நிலவும்வகை செபித்து என அடுத்தசெய்யுளில்தொடங்கும்சொற்களுடன்சேர்த்துக்கொள்க.

வகைசெபித் திடக்கை மலர்வலக் காங்கொண் டருக்கிய
வட்டகை வாரீர், தகையினக் காத்துட் கொண்0டுயிர் கரு
மஞ் சாற்றுமச் செபபல முழுதப், பகவன திடஞ்சேர்ப் பது
புறந் தெரிக்கும் பண்பதா யவ்வலக் காநீர், நகைமலர் வாத
காத்தவன் கொளுமா நல்கியஞ் சுவிசிர நயந்தாள். (அ௦)

0 உயிரையும், கர்மங்களையும், அச்செபபலனையும் அப்பகவனிடத்திற்சேர்த்தலைப் புறத்தேவிளக்குவதாய், அவ்வலக்காத்துள்ள நீரையும் மலரையும் அவன் இடக்காத்தில் என்றுகொள்ளும்படி நல்கி—தத்தஞ்செய்தென்க.

திருமறைத் தெளிவாஞ் சிவாகமவகைய திருமுறைகளைச்
சிவன் வலத்தும், குரவனை யிடத்துஞ் சிவமரு முறையிற்
குலவுபூ சனைபுரிஇ மேலும், மலர்நிறை புட்பாஞ் சலித்திரை
யம்மவ் வள்ளல்சே வடியுற வயக்கிப், பலமுறை வணங்கி
யெழுந்தருட் சோதிப் படிவநேர் பார்த்திவை துதிப்பாள்.

வேறு.

கங்கைமதி யெங்கும்விரை கமழுநறும் பொன்னிதழி கமல ளுதி, புங்கவர்த மங்கநிரை புரக்குமரி கண்கூர்மப் புற முன்னுப, நன்கலனுத் தரித்தவற்ற ளுடருந்தன் பீடில க்கு நாதன் வெற்பின், மங்கையறம் வளர்த்தவள்பால் வயங் கருள்வா கிசனிணை மலர்த்தாள் போற்றி. (சுஉ)

விடையானைப் 0பிறர்கரிதாய் விழுமயிர்போ லாதியற் சிர் விளக்கும் விண்பொற், சடையானை விரும்பார்க்குஞ் சார்முறையின் மேன்மேலுங் தளரா தியுங், கொடையானை யுலகுயுமா நிகமாக மங்களின்வைத் தோது நான்கு, நடை யானையறம்வளர்த்தாளுயகனைச்சேயடியையநமந்துவாழ்வாம்.

0 கருநிறமும் மேல்நிமிராது கீழ்ச்சாய்ந்துவிழுதலுமுடைய் பிறர்மயிர்போலாமல், பொன்னிறமும், மேல்நிமிர்ந்து ஆகாயத்தை நோக்குதலுமுடைமையால் சுவர்ணகேசி வியோமகேசி என்னுநாமங் களாலும் தனது இயற்கைச்சீர் விள்க்கும் சடையானைஎன்க. நான்கு நடை—சரியை கிரியை யோகம் ஞானமென்னும் நான்குஒழுக்கங் களை, உலகெலாம் மேற்கொண்டுய்யுப்படி வேதாகமங்களில் வைத் தருளினவனைஎன்க.

கங்கைபரித் தருப்பமெலாங் கழன்றுலகர் மோக்கநிலை கதுவுஞ் சீத, மங்கலவாழ் வருண்மோக்க தாதாதா னேயெ னுநான் 0மாண்பு மங்நீர்ப், பொங்ககங்தை யொருறளியு

ளடங்கமறைத் தருள்வீரப் பொலிவுந்தேற்றுஞ், சங்கரனைச் சோழபுரத் தனிமுதலை யிணையடியைச் சார்ந்து வாழ்வாம்.

0 மாண்பும், அந்நீரினகந்தை அடங்க மறைத்தபொலிவுமென்க.

மதியமலிந் தெவராலு மாற்றரும்பே ரிடராற்ற மையின்வந் தாரை., யதிவிரைவிற் றுங்கியொரு நிலையுறவைத் தாளருளு மறிவை *மாய்த்துப், பொதியிருளொ ழித்தொளிசெய் ஞானதா தாவந்தா னென்னும் பொற்பும், விதியினுணர்த்தபூர்வவாகிசனருளெஞ்ஞான் றும்விழைந்துவாழ்வாம்,

பொன்னிதழி புனைந்தரியா நியர்குடிலைப் பொருளாகார் புகலன் னுர்0தா, சந்நிலைதேற் றுவிதழி யைந்திகழுகள் குடிலைவளி வமைந்த கம்பி, மன்னியெழுத் தைந்துரிய ளேகுடிலைப் பொருளெனும்§வாய் வயக்கு மென்னு, நன்னிலைதேற் றபூர்வவா கிசர்திரு வடியிணைக ணமந்து வாழ்வாம். (௬௬)

அமரரெலும பணிந்தனைய சகம்பிரம மெனமயங்கி யலையா தந்தோ, நமர்களெலும் பிதன்றே வதித்தியர்கா நித்தியனின் றத னேயென், றுமைநலத்தி னுணர்நிலை0தா னுவகைவெறுப் பற்றொளிரு முண்மை தேற்றும், விமலனருள் வாகிசன் விரைமலர்த்தாள் சிரமிசைத்தாம் விதஞ்சார்ந்துப்வாம்.

---

* மாய்த்தல்—மறைத்தல்.    0தார்—மாலை.    § வாய்—வாய்மை.

0 நிலையும் உண்மையுமென்க.

0அரிவிழிவேய்ந் தவன்மீனு யசுரனைக்கொன் றகந்தை யிற்செ யலக்க னீக்கக், கரிமுகனை யுய்த்தகந்தை கடிந்த வன்கண் பிடுங்கிவந்து கழலிற் சாத்து, மரபுமவன் விழியி னல் லாழிபெற வனந்தநுவு வயக்குஞ் சோழ, புரனிலறம் வளர்த்தவள்பாற்போற்றருள்வாகீசனடி போற்றிவாழ்வாம்,

அரியின் விழியை வேய்ந்து, அதனுல் அவ்விராயகர். விஷ்ணுவாகிய மீனின் அகந்தைச்செயல்நீக்கி அம்மீன்கண்ணைப்பிடுங்கிவந்து சாத்தியதும், அவ்விஷ்ணு தான் சக்கரம் பெறுதற்காக நேரே சாத்தியதும் வயக்கும் வாகீசனென்க.

கமட0வெரிந் மிலைந்9தவனைம் பிறவியினிக் கிரகமுறு சடமைக்கேற்ப, நிமிருமவ னவ்வுருவுற் றுறுசெருக்கிற் புரியிடர்க னீக்கி யவ்வோ, டமைவுறுநீற் பதக்கமென வருள் வீர பத்திரனு லாய தோர்க்கும், விமலனறம் வளர்த்தவள் பான் மேவுபரன் சேவடிகள் விரும்பி வாழ்வாம். (கூகூ)

0 வெரிந்—முதுகு அது, அவ்வாமையின் முதுகாகிய ஓடு. 9 அவன்—அவ்விஷ்ணுவானவர், பிருகுமுனிவரால் அநேகயோனிகளிற் பிறந்துலையும்படி சபிக்கப்பெற்று வருந்திச் சிவபிரானைப் பூசித்து வேண்டி, அவனருளால் அப்பிருகுமுனிவர் அனேகமென்பதொழிந்து பத்துயோனிகளிற் பிறந்தொழிகவென்று கூறிய ஆணையின்படி அப்பிறவியுறுங்கால் ஐந்துபிறவியில் அநுக்கிரகமும், ஐந்தில் நிக்கிரகமும் பெறுகவென்று சிவபிரானருளிய கடமைக்கேற்ப வென்க. மச்ச கூர்ம வராக வாமனநரசிம்மமைந்தும் நிக்கிரகமுறையில் அருளப்பெற்றன.

வாலிபவெண் கேழலினின் மருப்பொளிரும் பொருப்பு
நிகர் மார்†பணிந்து, மாலனைய கேழலுமாய் மாறொழித்த
செருக்கினுளை மாலுங் காலை, வேலமலன் போர்த்தகந்தை
விட்டிமருப் பொடித்துவந்து மிலைந்த தோர்க்கும், நிலைகள
னறம்வளர்த்த நிமலைநா யகனடிக ளினைந்து வாழ்வாம். (எ௦)

† அணிந்து—ஓர்க்குமென்க.

ஆரவணிபு துட்டரையு மருட்பெருக்காற் றுட்டடக்கி
யாட்கொண் மாண்பு, முற‡வரிண முனிவர்விட வஃதொலி
யா லுலகிடர்செய் துறுத ஞெக்கிக், காமிசைவைத் தொலி
செவியிற் கவர்ந்திடர்தீர்த் தருள்புரிந்த கவினுந் தேற்றும்,
விரிகருணை வாகீச விமலனடிக்கமலமுளம்விளங்க வைப்பாம்.

0 மாண்பும் கவினும் தேற்றுமென்க. ‡ அரிணம்—மான்.

உடையானை யடுத்தவர்துன் புடைத்தானை யயன்சிரங்
கொய் யுகிராஞ் செய்ய,படையானைப் பெருகருளே படைத்
தானை யறம்வளர்த்த பாவை மேவும். புடையானை யேழை
யிடர் புடைத்தானை யுளமுருகிப் போற்றூர் பாங்க, ரடை
யானை நதிவேணி யடைத்தானைச் சோழபுரத் தடைந்து
வாழ்வாம். (எஉ)

விண்டுபுனை துளபமவன் பிருந்தைமயன் மிக்கினைந்த
விளக்கு நின்சீர், மண்டெழின்மு விதழ்வில்வ மிச்சாணு
னங்கிரியை வழங்க லோர்க்கும்,பண்டுமுமே னைப்பொருள்க

ளொவ்வொன் றி னியன்முற் றும் பகர்வார் யாரே, யண்டர்
தொழுஞ் சோழபுரத் தரசேசநின் சரணமெனக்கான மாமே.

(வேறு.)

என்று போற்றிமே லும்பல முறையடி யிறைஞ்சி
நின்ற வாணியை நோக்கிநன் றருளுமந் நிமல
னின்று நீநமைத் துவாதச மஞ்சரி யெனுமித்
துன்று தோத்திரம் புரிந்தனை மகிழ்ந்தனந் தோகாய் (எசு)

நிகம வாகமத் துள்ளுறு நமதுசீர் நிலைமை
திகழ மாவிளக் கித்துதி தினந்தொறு நேயத்
தகவி னோதுந ரிம்மைசேர் நன்மைகள் சார்ந்து
மிகல்சு ருங்கலில் பேரின்ப வீடுமே வுவரால். (எரு)

இனிநி னக்குவேண் டும்பொருள் யாதியம் பென்று
நனிம கிழ்ந்தரு டருதிரு வாசக நலங்கேட்
டனகன் முன்பினும் பணிந்தெழுந் தஞ்சலி யுடனின்
றெனைய னித்தயன் சத்தியா வைத்தருளெந்தாய் (எசா)

முற்று மோர்ந்தருண் முதல்வனீ யென்னுள முன்ன
மிற்றென் றோர்ந்துமென்வேட்கையாதென்றெனை வினவும்
பெற்றி வேண்டுவார் வேண்டுவ தேயருள் பிரானென்
றுற்று ரைத்தருள் சுருதிமாண் புணர்த்துவக் கருத்தோ.

எனைவி னுயருளெந்தையே பிவர்க ளெவர்க்கு
நினைவு வாயினு லுரைத்துறு பயன்பெறு நிலைமை

தனைய விந்நியங் குறப்புரி தலைமையென் றனக்கே
யினிது நீதா தனிவிழைக் கெய்தினே னீண்டு. (எஅ)

அனைய வாக்கரு ளியிருந் தருடல மனேக
மெனினும் வேதவா கமமெலா முதன்மையி னிசைக்கு
மினிய நாமம்வா கீசநா மம்மிதே யேழை
நினையும் வாக்கரு டாற்குறு பொருத்தமாய் நிலவும். (எகூ)

ஆத லாலுனை யப்பெயர் கொண்டிருந் தருளிச்
சித மாதலத் தடைந்தடி யருச்சனை செய்தே
னூத நீபருள் கென்று வேண் டினள்பினு நமந்தாண்
மாது பாதிய னுளமகிழ்ந் தவட்கிது வழக்கும். (அ0)

வாணி கேண்மதி நின்விழை வின்வகை வாக்குப்
பேணி நீயுயிர்க் கருளிலை தந்தனம் பிறங்கு
மாணி லாவு வாக் கிறைவியென் பெயருநீ வாய்ந்து
பூணின் பார்தா வாழ்கவென் றின்னருள் புரிந்தான். (அக

அமல னாருள் பெற்றுள மகிழ்ந்தவ னடிக்கீழ்
நிமிரு மன்பொடு பணிந்தொரு வாறவ ணின்று
கமலன் பாங்குறீஇ யானரு ளிலைநலன் கமுறி
யெமைய ளிப்பவ னருளினை நினிதுவீற் றிருந்தாள்.

---

அருள்—இத்தலமென்க,

இன்ன மாண்கதை யோதுநர் கேட்குந ரெவரு
நன்னர் வாக்குமுன் ஞுயபன் னலனெலா நயப்ப
மன்னி வாழ்ந்திவண் டிருவரு ளிலைநிறை வரனு
லன்னை பாதியன் சேவடி நீழல்வாழ்ந் தயர்வார் (அந)

---

ஆகக் திருவிருத்தம் ௩௦௭.

# விசயபுரப் படலம்.

பொலிபல் வளஞ்சார்ந் தொளிர்சோழ புரப்பே ரார்ந்
திந் நாளியலித், தலனிற் கலைமான் முன்போந்து சார்ந்த
பேறு சாற்றினமித், திலக தலமுன் ஞுள்விசயன் சேர்ந்தா
ரருள்சார் திறனிதனு, னிலவு விசய புரப்பேரா னிகழ்ந்த
வாய்மை நிலைமொழிவாம். (க)

கண்ணா னணித்தாய்ப் புறத்தெவருங் காண வுடன்
சார்ந் துதவவமைத், துண்ணின் றவனை யும்மியக்கி யொரு
வா தந்நாள் வாக்களித்த, வண்ண முதவு சிவனருளான்
மாறு கடிந்து நிலம்புரந்தா, ரெண்ணு சீர்ப்பாண் டவரைவ்
ரெனல்பா ரதந்தேற் றிடும்விரித்தே. (உ)

சிவபிரான், பாண்டவரைவருக்கும் முற்பிறப்பில் உங்களுக்கு நாமே நின்று பகைநீக்கியருள்வோமென்று வாக்களித்தவண்ணம், அவர்களுக்கு அணித்தாயுடனிருந்து உதவும்படி கண்ணனை எவருங் காணப்புறத்திலிருத்தி அவனையும்உண்ணின்றியக்கிப், போர்க்களத்தில் சூலபாணியாய்ப் பிறரறியாதபடிமுன்னின்று அப்பாண்டவரது பகைவர்களை அடித்துச்சாய்த்தல்முதலிய பற்பலஉதவிகளைச்செய்து வந்த அப்பரமனது திருவருளால் மாறுகடிந்து நிலம்புரந்த பாண்டவரென்க.

அலரு ணடுநா யகமலியா யகிரும் விசய னறிவு0நிறை
யுவகை வாய்மை தூய்மையரு ளொழுக்கம் வீரந் திரம்வலி
1ஈகிகை சுகுண நீதிகலங் காமை யஞ்சாமைதுணிவு[சொல்.
தவமான் பன்பு சிவார்ச்சனையோர் சாந்தந் 2தானம்புகழின்

0 அறிவுநிறை கூறவே இனம்பற்றி ஓர்ப்பும் கடைப்பிடியுங் கொள்க. இந்நான்கும் புருடர்க்கு முக்கியகுணமென்க. அருளும் ஒழுக்கமுமென்க, 1 ஈகிகை—கொடை. இது, இன்னார்க்குத்தா னென்றும் வரையறையின்றிக் கொடுப்பது. 2 தானம்,—இன்னார்க்கென்றும் வரையறைசெய்துகொடுப்பது.

பெரியார்ப் பணிவு முகமலர்ச்சி பேத ருமை சிதநிலை
யொருவா நன்பா ருயிரோம்ப லுறவு தழுவ லுபர் கேள்வி
யரிதாய் கல்வி சிற்றினஞ்சே ராமை யழுக்கா றுமைமுதல்
விரியாவலங்களெல்லாமுமேவிப்பிரியாவிதம்வாய்ந்தோன்(௪

கன்னன் சிவோகம் பாவனையின் கனத்தா லெல்லாந் தன்மேனி, நன்னால் காட்டி யெனையேநீ நவில்பூ சனைசெய் கென்றதனை, யெண்ணு சிவனே புகன்மொழியா மென்று நாளுஞ் சிவபூசை, யன்ன லாக மஞ்சொன்முறை யன்பி னூற்றி யின்புறுவோன். (ரு)

உண்ப தன்முன் மலர்பறித்திட் டுண்கவெனவோ தருட் சுருதிப்,பண்பு வழுவா தரிமாயா ரூபந்தனையும் பாவனையா, லெண்பு ராரி யுருவாக்கி யியற்று பூசைத் திடநிலையை, வெண்பொற் கயிலை நேர்கண்டு மேவு முவகை விறல்வீரன்.

உலகு புரக்கு நிலைமையுமவ் வுமைகோ னருளி னல நுதனித், தலைமை மாற்கின் றெனும்வாய்மை தனையக் கண் ணன் சார்ந்துடனுய்க், குலவு கயிலைப் பாசுபதங் கொடுப்பித் தருள்வா னப்பரனை, யிலக வேண்டி விளக்கிடவஃ தெய் தப் பெற்றே னெழில்விசயன். (எ)

எவரும் வெருவ நிகரின்றி யியற்று சமரின் மாற்றார் செய், தவறு கண்டுஞ் சிவன்முடியி தழிகாண் டிலனென் னுயிரிழக்கு, மவதி யுறினு மெனுந்திடனே ரணுவு நழு வாப் பேரன்பி, னிவரு மபிம னெனுமைந்த னிவன்றாக் குணஞ்சார்ந் தியன்மகனும். (அ)

எளிய ரிடர்தீர்த் துடனேம்பு மியற்கை நலங்கூ ரவ் விசய, னளியி னெருவிப் பிரர்க்கடுத்த வலக்கண் விலக்கு

வான்முன்னே, னெறிசெய் சயனக் கிருகப்பாங் குறு
காண்டிபமாங் குற்றெடுத்துத், தளரும் பனவ னிரைகவர்ந்த
தறுகட் பகைவர் வலிமுருக்கி. (கூ)

நிரைமீட் டளித்தப் பனவனிடர் நீக்கி யுவகை நிலையு
றச்செய், துரிப தன்முன் சயனப்பாங் குற்ற தீமை யொ
ழித்திடுவான், புரை தீர் தீர்த்த யாத்திரைநாம் புரிந்து வருது
மெனத்துணிந்து, திரிவின் மனத்தா னகர்நின்றுந் திருத்த
நோக்கிச் செல்கின்றான். (க0)

சார்க னாண்டி லொருபாதி சாரு மற்றோர் பாதிபுவி
நாரும் பூசித் திட்டசித்தி நண்ணி வாழ வருள்புரிந்தெய்
பாமன் கேதா ரேசான்வாழ் பதியிற்றானீர்முறைதோய்ந்தவ்
வான்சே வடிபூ சித்தேத்தி யரிதி னீங்கிச் சென்றனனால் (கக

அகந்தை நீக்கித் தன்வேவளி யடுத்துத் தூய்தாம்
வகைசெய்தா, னுகந்திங் களித்த கங்கைசார்ந் தொளிர்சீர்க்
காசிப் பதியணைந்தச், சுகந்த நீர்தோய்ந் தகிலேசர் துணைத்
தாள் பூசித் தினிதேத்தித், திகந்தம் பரவு சிசைலஞ் சென்
றான் குன்றாச் சிவநேசன். (கஉ)

திருத்த முறையிற் றோய்ந்தணைய திருப்ப ருப்ப தேச
னடி, யருத்தி யுறப்பூ சித்தேத்தி யவிரிந் திப நீ லச்சிலம்பி,
விருத்தற் பணிந்து வடகாட்டு நிலவு தலங்க ளாங்காங்குக்,
கருத்துந் துறச்சென் றமலனடிக் கமல மிறைஞ்சிச் செல்
கின்றான். (கங)

உலகரெவர்க்குங் கண்ணாரு ளொருவ னமக்குக் கண்ணளித்த, தலைவ னமது கண்மணியா தலினம் மணிமை சார்ந்தொளிர்கென். றிலகு திருமுன் னெஞ்ஞான்றுமிருந்தி கொடுவீற் றிருந்ததனைய, நலனங் கெவர்க்குந் தெரிந்தருளு நாதன் றிருக்கா ளத்திநகர். (கசு)

சென்றங் கடைந்தார்க் கெம்பெருமான் சேர வளிக்குந் திருவருளே, யென்றுங் காண னீர்வடிவா யிலங்கு கின்ற தென்றுன்றோர், நன்று கூறும் பொன்முகலி நதிநேர் கண்டா னருடோய்ந்தாங், கொன்று முளத்தான் முறைபடிந்தா னுவகை நியதி யுறப்புரிந்தான். (கரு)

(வேறு.)

தென்கயி லாய மென்று திருந்துநூல் செப்பும் வாய்மை
நன்கிலக் கனைய வெற்பி னண்ணிமேன் முக்கண் ணப்பன்
மென்கம லத்தாள் சென்னி மிசையுறப் பணிந்து போற்றித்
தன்கருத் துருகா நிற்பத் தனைப்பரி தாகி நின்றான். (கசு)

பின்னொரு வாறு நீங்கிப் பிஞ்ஞகன் கயிலை நின்றுந்
தன்னொரு 0தலையி னானந் தந்தையாம் பரன்ற னக்கோ
ரன்னையென் றழைத்த பாட்டி யணைதிரு வாலங் காட்டி
லுன்னுமன்புகைப்பச்சென்று னூர்த்துவநடனங்கண்டான்.

0 தலையினால் அணை ஆலங்காடென்க.

திருவடி பணிந்து போந்து திருசந்தி திருவா யூதி
வருபுன லெந்த நாளு மருதல னெலாம்ப ரந்து
விரிதிரு ஞூற லென்று விளக்குபிர்த் தலத்த டைந்தெம்
பாமனைப் பணிந்து போற்றிப் பாங்குறப் படரா நின்றான்.

உலகெலா முறையித் பூசித் தப்நெறி காட்டத் தானே
நிலவுலா வியபீர் வேணி நிமலனைச் சிவாக மஞ்சொ
லலனுலா முறைபூ சித்து நண்ணிவிற் றிருந்தெஞ் ஞான்று
மிலகுகா மாட்சி யன்னை யினிதருள் காஞ்சி நண்ணி. (௧௯)

பரவுமே கம்ப நாதன் பதமலர் பணிந்து போற்றிப்
புரவுசெய் மால்சம் பந்தர் பொன்னடி போற்றி யன்னர்
தருசிவ சாரு பம்பெற் றுப்ந்தமேற் றளிசார்ந் திசன்
திருவடி யிறைஞ்சி யாங்குத் திகழ்தளி பலவும் போற்றி. (௨௦)

இருவர்புள் வடிவிற் சார்த லிடிதொழல் பன்னிரண்டாண், டொருமுறை வலம்பு ரிச்சங் குறுதனேர் காட்டு வேத, கிரியெனுங் கழுக்குன் றெய்திக் கிளர்வளை நீர்முற் றோய்ந்தவ், வொருமலை யிவர்ந்தெம் பெம்மா னொண்மலர்ப் பதங்கள் போற்றி. வளைநீர்—சங்கதீர்த்தம். (௨௧)

உலகெலா முடைமை யாக்கொண் டொற்றியூ ருறையு மெம்மான், மலரடி பரவி யென்போர் மாணிழை வடிவாய்ச் சைவ, நிலைநல னெவருங் காண நேருற விளக்கு சிர்வாய்ந், திலகுவண் மயிலைக் காபா லீசர்சே வடியி றைஞ்சி. (௨௨)

இவ்வணந் தொன்னடை நாட்டி னிசைதலந் தீர்த்த மெல்லா
செவ்விதிற் போற்றி யீசன் றிரிபுரந் தீய மூவ [ஞ்
ருய்வுறத் தேர்ப்போர்க் கோலத் துற்றமை மானந் தான்றேற்
றவ்வதி கைவீ ரட்டத் தமலனை யடுத்தி றைஞ்சி. (௨௩)

தேர்மேற் போர்க்கோலத்துடன் உற்றமையை, அத்தேர் வடிவாய் விளங்கும் (கர்ப்பக்கிருகமேலுள்ள) விமானமும், (போர்க் கோலத்துடன் விளங்கும்) தானும் (சிவபிரானும்) தேற்றுகின்ற திருவதிகைவீரட்டானமென்க.

நாம்பா மென்ற கந்தை நன்னுமே கான்ம வாதத்
0திம்பருக் கரிய னென்ப தேற்றவவ் விருவர்க் கெட்டா
தாம்பெருஞ் சோதி யாய்நின் றருளரு ணாசலஞ்சார்ந்
தோம்புறச் சூழ்ந்து முன்வந் தொண்மல ரடியிறைஞ்சி. (௨௪)

காசியின் மேலென் சீர்கோ காட்டுநன் முதுகுன் றேத்தி
தேசுறு காழிச் சேயின் சிற்றடி கன்று மேயென்
றாசறு சிவிகை யாதி யருடிரு வரத்து றைக்கு
நேசமீ தூரச் சென்று நிருமல னடிகள் போற்றி. (௨௫)

திருத்தமிழ் வேதங் கட்குப் பண்முறை தெரிப்ப மன்றி
னிருத்தனு ளருளாற் போந்த நிமலன்முன் பண்வ குத்து
விரித்த*பெண் மணியெ ருக்கத் தம்புலி யூரின்மேவி
யருத்தியி னமலன் செய்ய வடித்துணை வழுத்திப் போற்றி.

---

0திம்பர்—தீயவர். *பெண்மணி அவதரித்தஎருக்கத்தம்புலியூரென்க.

அருளினாற் கயிலை யின்க ணாருரு வாய்ந்த ணித்தாய்
மருவுசுந் தார்மூ வாண்டு மைந்தா யாதி சைவ
குரவர்நன் மாயிற் போந்து குலவுசீர் நாவலூருந்
திரு0வரு ணந்தி யாசான் றிருத்துறை யூரும் போற்றி.(உஎ

0 அருணந்திசிவாசாரியரவதரித்தருளிய திருத்துறையூரென்க.

ஆண்டவ னடிமை வாய்மை யருணெறி யகில மெல்லாம்
பூண்டுய் மாவி ளக்கிப் *புராரியப் புத்தூர் நின்று
மீண்டுவந் துருநேர் காட்டி மேவுசுந் தாரை நேர்வைத்
தீண்டருள் புரியும் வெண்ணெ யிருப்பதி சென்றி றைஞ்சி.

* புராரியானவர் பிராமணராய் மணம்வந்த புத்தூர்க்கு வந்து சுந்தரர் தமக்கு அடியவரென்று கூறி அதனால், அகிலமெல்லாமும் ஆண்டானடிமைத்திறங்கூறும் உண்மைநெறியாகிய திருவருணிறைந்த சைவநெறிபூண்டு உய்யும்படி விளக்கி அப்புத்தூரினின்றும் மீண்டுவந்து தமதுருவ நேரேகாட்டி அடிமைகொண்டு அச்சுந்தரரைத் தமது திருவருட்டுறையென்னும் திருக்கோயிற்றிருச்சந்நிதியில் நேர்முகமாக எப்போதும்வைத்துக்கொண்டு அருள்புரியும் திருவெண்ணெய்நல்லூரென்க.

அற்புதத் திருள்வி லக்கி யருணெறி நிறுத்த நால்வர்
துப்பினோர் நோக்கு தீக்கை தூயநான் முறையிற் சைவ
மற்பின்மேற் கொளச்செய் சந்தா னாரியர் நால்வர் முன்னுச்
செப்புமெய் கண்டான் பெண்ணா கடப்பதிசென்றி றைஞ்சி.

அற்புதச்செயல்களால் இருட்சமயவலிவிலக்கி அருட்சமயாலன் விளக்கி அசைவறநிறுத்திய சமயாசாரியர் நால்வரின் துப்பினும் மேலாக நேரில்நோக்கும் அருட்பார்வையாகிய சட்சு தீக்ஷையினு லும், தூயநூல்களாகிய சித்தாந்தநூல்களினுபதேசமுறையினுலும் அவ்வருட்சமயமாகிய சைவநிலையை அன்புடன்மேற்கொள்ளும்படி செய்தருளிய சந்தானுசாரியர் நால்வரின் முதல்வராகிய மெய்கண் டாரது திருப்பதியாகிய பெண்ணுகடமென்க. துப்பு—வலி.

வாமன னுப தன்னை வணங்கித்தான் வஞ்சித் தேற்ற
பூமிசொற் றவறு நீந்த புண்ணியன் றனைய ரத்திற்
ரூமுற வீழ்த்த பாவந் தொலையமால் வழிபட் டேத்துங்
கோமுத லமரு மாணி குழிபுகுந் திறைஞ்சி யேத்தி. (ருO)

O மாலானவன், வாமனருபியாய்வந்த தன்னை வணங்கி, அம் மாலாகிய தான் வஞ்சகமாயாசித்த பூமியை, அவ்வஞ்சகந்தெரிந்தும் தருகிறேனென்று முற்கூறிய வாக்குத்தவறாது கொடுத்த பூமிதான நிர்வஞ்சக புண்ணியனுகிய மாபலியை, அரத்தில்—பாதலத்தில்வீழ்த் திய பாதகந்தொலையும்படி அம்மாலால் பூசிக்கப்பட்ட பசுபதியாகிய சிவபிரான் அமர்ந்தருளும் மாணிகுழியென்க. வணங்கி ஈந்த என் றியையும். மாணி—பிரமசாரி.

கூற்றனைக் கடந்த நாதன் கோவல்வீ ரட்ட மாதி
யேற்றசிர்த் தலங்க ளெல்லா மெழினடு நாட்டு ளேத்தி
போற்றுசீர் பரந்த தில்லைப் பொற்பதி யெல்லை சார்ந்து
தேற்றமீ தூரத் தாழ்ந்து திசமுயர் நகருட் சென்றான்.(ருக)

சிவமய மெனல்வி ளங்கச் சிவைதிரு முன்னி லங்கு
சிவகங்கை தோய்மாண்பாற்றிச் சிவசிவவெனச்செ பித்துச்
சிவனடி பரவி யுள்ளஞ் சிவந்திகழ் தாமுன் மூழ்கிச்
சிவநிய மங்க ளாற்றிச் சிவனருள் மணிமன் றெய்தி. (௬௨)

பொன்னொளிபரப்பியாண்டும்புறத்திருளிரித்துக் கண்டோர்
மன்னகத் திருணீத் தின்ப வாழ்வருண் மன்ற வாணன்
றன்றுணைத்தொழின டஞ்செய்துாயவருளுருநேர் கண்டான்
றன்னையு மறந்தா னந்த சாகரந் தனிதி ளைத்தான் (௬௩)

பன்முறை பணிந்தெ ழுந்து பாவினன் பிறிவாற் றுது
தன்மனங் குஞ்சி தப்பொற் றுளில்வைத் தொருவா றேகி
நன்மணங் காழி வாழ்வு நயந்தருள் பெரும ணம்பின்
முன்மணந் தவத ரித்த முதுதிருத் தோணி போற்றி. (௬௪)

மருந்தளித்துட லுயிர்க்கண் மருவுநோய்தீர்த்தெம்பெம்மான்
பொருந்துபுள்ளிருக்குவேளூர் புவனத்தாய் மயிலாய்ப் பூசித்
திருந்தருண் மாயூ ரஞ்சன் டேசுர ரவத ரித்த
பெருந்தகைச்சேய்ஞ்ஞலூரிற்பிரான்கழல்பணிந்தி றைஞ்சி.

காழிச்சே யிலிங்க மெங்குங் கண்டுளே காது நிற்ப
வாழிச்சைப் பிரம வித்தை யன்னைநேர் வந்த ணைத்துக்
காழுற்ற மருங்கிற் கொண்டுட் கதுவிபா லயம்பு குந்து
கேழுற்றவ்வடிவினென் றுங்கெழுமுவெண்காடுபோற்றி. (௬௬

சீகாழியிலவதரித்தருளிய சேய்—சுப்பிரமணியராகிய ஞான சம்பந்தக்குழந்தை, திருவெண்காட்டுக்கு வரும்போது அந்நகர்க்கு வடக்கிலுள்ள மணிகர்ணிகைநதிக்கரையில் நின்றுகொண்டு, அந்நக ரிடங்களெல்லாம் சிவலிங்கவடிவங்களே இடையீடின்றிப் பரம்பி விளங்குதல்கண்டு உட்செல்லாது அக்கரையிலே நின்றருள, அத் தலத்திலமர்ந்தருளும் பிரமவித்தியாநாயகியாராகிய அம்மையார் அங்குவந்து தமது இளங்குழந்தையாகியசம்பந்தரை எடுத்தணைத்து மேகலையணிந்த தமது மருங்கில் (இடுப்பில்) வைத்துக்கொண்டு கோயிலுட்புகுந்து கேழுற்ற அவ்வடிவத்துடன் (அக்குழந்தைஇடுப்பி லிருக்கின்ற வடிவத்துடன்) தமது கோயிலில் எக்காலமும் விளங்கு கின்ற வெண்காடென்க. அவ்வடிவத்துடனிருக்கும் அம்மையாரைப் பிள்ளையெடுக்கும் நாச்சியாரென்று கூறிப் புத்திரப்பேறுமுதலியன விரும்புவார்பலர் அபிஷேகநைவேத்தியாதி நியம பூசனைசெய்வித்து வேண்டிநின்று சற்புத்திரப்பேறுமுதலியனபெற்று வாழ்கின்றார்கள்.

புரத்தலை யரிக்க ளித்தப் புரவிட ரின்றிச் செல்வான்
வரத்தனி யாழி தந்தோன் வாழ்திரு வீழி காழித்
திருத்தலத் துலகெ லாமுய் திறனுறப் போந்த சேயா
பிரத்தகுபொன்கொள்சீராவடுதுறையெய்திப் போற்றி. (நூஎ

படிந்தவர் பாவந் தீர்க்கும் பாவன கங்கை பாவந்
கடிந்திட மாம கத்திர்த் தம்படிந் திறைஞ்சு சீர்சால்
குடந்தைசேய் முத்துப் பந்தர் கொண்டுவந் தருள்பட் டீச
படந்திகழ் சத்தி முத்த மேத்தமர் நீதி நல்லூர், (நூஅ)

§வலஞ்செயைங் கரன்ம கோற்ச வங்கொடு வாழ்மு தன்மை
வலஞ்சுழி குகன்கு ருத்து வந்திகழ்த் தோ கம்ம
கலஞ்†சிறுத் தொண்டராற்று கணபதிச் சாந்தொல்0சேர்ச்ச
கலஞ்செய்சேய்விடந்தீர்த்தின்பிற்கலப்பித்தமருகல்போற்றி

§ வலம்—சர்வவல்லபம். † சிறுத்தொண்டர் அகலம் ஆற்றுளன்றியையும். அகலம்—விரிந்ததிருத்தொண்டு. 0 சேர்ச்சகலம் செய்சேய்—சகலசிறப்புஞ் செய்தருளும் சம்பந்தர். அவர், வணிகன் விடம் நீக்கியருளி அவன் குறித்தபத்தினியுடன் இன்புற்று வாழும்படி மணஞ்செய்வித்தருளுதற்கிடமான திருமருகலென்க.

அரசுநான் போது கின்றே னென்றா னழைக்கு முன்னர்ப்
பாசுவெண் கயிலை யின்கட் பரனருள் பெற்று டன்சா
ருரிமைநேர் விளக்கி யெம்மா னெண்கழ னிழற்பு குந்த
பொருவில்பூம்புகலூர்சார்ந்து பொன்னடிபணிந்துபோற்றி.

திருநாவுக்கரசர், முன் கயிலையில் பரமனருள் முழுதும் பெற்றுச் சிவமேயாய்ச் சீவன்முத்தநிலையராய் வீற்றிருந்தருளிய உரிமையை, இப்பூமியில்வந்தபின்னும் எப்பொழுதும்மாறாத அச்சீவன்முத்தநிலையினராயேயிருந்து முடிவில் அப்பரமன் அழைக்கு முன்னரே தாமாகவே, நான் வருகின்றேன் (புண்ணியனேவுன்னடிக்கேபோதுகின்றேன்) என்று பாடிக்கொண்டு கழனிழற்புகுந்த புகலூரென்க.

(வேறு.)

ஆரிதயாம் புயநகரா யகிலவியா பகநகராய்த்
தோடியார் சிவானுபவத் திருவமுதார் தருநகரா

யோர்குடிலை கணேசுரன்வீற் றிருந்தருண்மூ லாதாரச்
சீர்பரவு ராய்த்திகழுந் திருவாரூர் சென்றடைந்தான்.

ஆரூர் என்னும் சொற்பொருள், பூமியின் இருதயகமலமாகிய நகர். எங்கும் நிறைந்த சர்வவியாபகநகர். சிவானுபவம் நுகரும்நகர் என்பன முதலியவாம். ஆர்—பூமி. ஆர்தல்—நிறைதல் நுகர்தல், குடிலை—குண்டலினிசத்தி. அச்சத்தியுடன் கணேசன் வீற்றிருந் தருள்கின்ற மூலாதாரநகரென்க. ஏர்—எழுச்சி.

தேவநீர்த் தம்படிந்து சிவநியமார்ச் சனையாதி
யாவனசெய் தருட்கோயி லண்ணுபுகோ புரம்பணிந்து
பாவனதே வாசிரயன் பணிந்தேகி யுட்புகுந்து
மூவர்முதற் பரமர்திரு மூலட்டா னஞ்சார்ந்தான். (சஉ)

பன்முறைமூ லட்டானப் பரனடிகள் பணிந்தேத்தி
வின்மலிசீர்த் திருவீதி விடங்கப்பேர்த் தியாகேசர்
முன்மருவி சத்துசித்தா னந்தமா மூவகைத்தாஞ்
சின்மயசோ மாக்கந்த திவிபவரு ளுருக்கண்டான்.(சங)

திருமுன்பு பணிந்தெழுந்து தியாகேசா விண்ணுமொரீஇக்
கருமநிக ழிப்பூமிக் கண்ணுற்ற யண்ணல்வான்
பருகுபோ கக்குரித்திப் பாரஞ்செய் துய்நிலைத்தென்
றெருவிழைந் துலகுய்ய வுணர்த்துதிரு வுளக்கருத்தோ.

தியாகேசஅண்ணலே, விசேடித்தோதும் விண்ணுலகையுநீங்கி இக்கர்மபூமியில் வந்தருளினையே இது, அவ்வேட்கையர் சிறப்பித்

துக்கூறும் அவ்விண்ணுலகங்களெல்லாம் அற்பபோகங்களையனுபவித்தற்கேயுரியதன்றி அவற்றை வெறுத்துச் சிவபுண்ணியங்களைச் செய்து நித்தியமாகிய பேரின்பம்பெற்றுய்தற்குரியதன்றென்பதும் இப்பூமியே அவ்வாறுய்தற்குரியதென்பதும் உலகர்தெரிந்து அவ்வநித்தியபோகங்களை வெறுத்து நித்தியவேட்கையராய்ச் சிவபுண்ணியங்கள் செய்துய்கவென்னுந் திருவுளக்கருத்தோவென்க.

தேங்கோதை சேயுடனித் திருவாரூர்த் திருநகரிற்
பூங்கோயி லமர்ந்தருளிப் போகாம விருந்தனையென்
ஞோங்கார முகன்வலவை யொளிர்மூலா தாரதல
0மேங்கூவி னுளக்கமல மெனுந்திருவு ளக்கருத்தோ (சரு)

0 ஏமம்—ஏம்என்றாயது. ஏமம்—இன்பம், கூ—பூமி.

தியாகேசா சிவநேசர் திருக்கூட்டச் செல்வரிடைத்
தயாநேசா வகிலேசா தண்கமலைத் தலவாசா
பயோததியா னிருதயத்திற் பாவனையின் வந்தவருண்
மயாகரனே சுயாதிபனே மாதியலும் பாதியனே. (சசா)

என்றுதுதித் தொருவரிதா யிறைஞ்சியிரு தயத்தனைய
மன்றன்வடி விருத்தியொரு வாறேகி மறைக்கதவ
மன்றுதிறக் கருந்தமிழே யாரியத்துஞ் சிரியதென்
றென்றதுதேற் றுரியதிரு மறைக்காடு கிடைத்திறைஞ்சி.

திருவாஞ்சைசெயுஞ்சீர்த்தாய்த் திகழ்வாஞ்சையெலாமளி
திருவாஞ்சியம்புகுந்து தேவர்பிரானடியிறைஞ்சிக் [க்குத்
கருவாய்ந்த மகட்கிரங்கித் தாயுமாய்க் காத்தவருட்
கருவாய்த்தசிராப்பள்ளிக்கண்ணுதலோன்கழல்பரவி. (சஅ

இவ்வகைவண் சோழநாட் டிருந்தலங்கள் புரிந்திறைஞ்சி
0வெவ்வாக்க னும்மிலிங்க மேற்கொடசுத் தஞ்செய்யா
தவ்விலிங்க தாரிகண்மார்க் கம்பழுதென் றறிவிக்குந்
திவ்வியகோ கன்னமுதற் றிருத்தலங்க ளடுத்திறைஞ்சி,

0 கொடிய அரக்கனாகிய இராவணனும், சிவலிங்கத்தைத் தாங்கிக்கொண்டு சலமோசனாதி அசுத்தகாரியஞ் செய்யப்படாதென்று அதனை ஒரு பிராமணரிடம் கொடுத்துவிட்டுச்சென்று சலமோசனஞ்செய்து சுத்தஞ்செய்துகொண்டு வந்து அவ்விலிங்கத்தைத் தீண்டி, அதனால், மலசலமோசன ஆகார நித்திரை மைதுனாதி எக்காலங்களிலும் சிவலிங்கத்தைத் தரித்துக்கொண்டே திரிபவர்களின் மார்க்கம் சிவத்துரோகமார்க்கமே என்றறிவித்த இடமாகிய திருக்கோகர்ணமென்க.

குளிர்சுரமங் நாடெங்குங் குலேந்தோடக் குலக்காழி
வளருமணி நீலகண்ட மருந்தருளுஞ் செங்குன்றூ
ரொளிருமவி நாசிபே ரூரஞ்சைக் களமுதல
நளிர்துளுவங் கொங்குமலை நாடெங்கு நயந்திறைஞ்சி(ருo

துளுவநாட்டில் கோகர்ணம், கொங்குநாட்டில் திருச்செங்குன்றூர் அவிநாசி பேரூர், மலைநாட்டில் திருவஞ்சைக்களமென்க.

என்னாடு மித்திருநா டெல்லாமு மிமையவர்வாழ்
பொன்னாடும்புகழ்ந்தேத்தும்பொற்பினதாய்ப்புரிதமிழின்
சொன்னாடு பெருமகிமை துலக்குபுன னிறைவைகை
நன்னாடு பெரும்புலவோர் நவில்பாண்டி நாடடைந்தான்.

எல்நாடும்— அருளொளியுடையதென்று அன்பர்களால் நாடப் படுகின்றனவாய் மேற்கூறிய இத்திருநாடெல்லாமும் பொன்னுடும் புகழ்ந்தேத்தும பாண்டிநாடென்க.

(வேறு.)

எல்லை சார்ந்துவா னவர்தின மீண்டுவந் திறைஞ்ச
வில்லெழுந்தொளி ரேணிநள் வைத்தென மேய்வான்
செல்லு மாலவாய்க் கோபுரங் கண்டுளந் திகழ்ந்தாங்
கொல்லை தாழ்ந்தெழுந் தஞ்சலி காத்தனுட் சென்றான். (ருஉ

செல்லுங் காலையின் வருகென வழைத்தலிற் சேண்போய்ப்
புல்லுங் கேதனத் தசைப்புமப் புனிதன்வாழ் பொற்கோ
யில்லி லக்குமா ராய்ச்சிமா மணியினீ டிசைப்பும்
நல்ல கண்டுகேட் டறிவிரைந் தின்பொடு நடந்தான். (ருஙு)

அசைப்பும் இசைப்புமாகிய நன்மைகளை என்க.

அரசன் வேண்டுற வருள்கங்கை நீரின்மே லாய்த்தற்
பரசி யென்றுஞ்சார் தூச்சிவ கணங்களின் பதியாய்
வருகுண் டோதரன் வேண்டுறச் சுந்தர வழுதி
தருநன் மாண்புறு வைகைசார்ந் தனன்றனஞ் சயனே. (ருச

படிவி திப்படி படிந்தனன் படியில்வெண் பொடிமெய்
படியுத் தூளனம் புண்டரம் பகர்முறைப் படிசெய்
கடிவில் சந்திவந் தனமுத வியதிகள் ⁰கருதிக்
கடிது வந்தனன் கயற்கணி வான்சின காமே. (ருரு)

⁰ கருதி—கருத்துடன்செய்து.

மதுரை யேமுக மாக்கொடு வயங்குவண் பாண்டி
யிதமன் மங்கலே களத்திரு மங்கல மெனவே
துதிசெ யாலவா யெனுந்திருக் கோயின்முன் றுன்னி
விதியி றைஞ்சியுட் புகுந்துபொற் றாமரை வியனீர். (௫௬)

வான்மெய் நாடியங் கீரினு மாபினி ஞடித்
திருவெண் ணீறுகண் மணிபுனை இச் சிவமநுச் செபித்தெம்
பரம னைங்கரன் சித்திமா முகனடி பணிந்தே
யருளு மங்கயற் கண்ணிசே வடிமல ரிறைஞ்சி. (௫௭)

அரிய பாண்டிமங் கலேகளத் தவிருமங் கலத்துக்
குரிய நாயக சோமசுந் தரன்றளி யுற்றுங்
கொருவி லாவதி காரநந் தீசுர னுபய
விரைம லர்ப்பதம் பணிந்தருள் வேண்டியுட் புகுந்தான் (௫அ)

கயிலே யாதிய தலங்களிற் றேன்றுமுன் கருணை
யியலு மித்தலத் தினின்முளேத் திலங்குகின் றனனென்
றுயல்வி ளாக்கரு ணூலெலா முரைத்திடும் வாய்மை
நயவண் மூலலிங் கேசன்முன் பன்முறை நமந்தான். (௫௯)

(வேறு.)

கோம ளந்திகழ் 0தாம வண்கயல் கூறு மங்கணி நேசனே
சேம கந்தா தூய வந்தா சேர்சு தந்தா தேசனே [வாழ்
காம னந்தகன் மேவு கண்பத காவல் கொண்டருள் கூடல்
சோம சுந்தர சோம சுந்தர சோம சுந்தர நாதனே. (௬0)

தாமம்—ஒளி. சேம கந்தரம்—(விடமுண்டு யாவரையும்)காத்த கண்டம். தூய அந்தரம்—சிதாகாசம். காமன்மேவிய கண்ணும், அந்தகன்மேவிய பதமுமுள்ளவனே என்க.

நீடு வன்பழி சாடு மிந்திர நேய வந்தித பாதனே, தேடு விண்கரி சாபம் விண்டொளி சேருமின்பரு ணீதனே, கோடு வெண்பிறை பீடு றும்புனல் கூறு கொன்றைமன் வேணியாய் யீடி லன்பர்க ளூடு மொண்பத மேற நன்றரு ளேணியாய்.

என்று போற்றியி றைஞ்சி யாங்கரி தேகி யன்புற வெண்பொனின், மன்றி றைஞ்சினன் முன்பு றத்தொரு வாறு வந்தனன் மற்றவன், நன்றி பேரெழில் வீர மாதிய நன்கு ணர்ந்திடு பஞ்சவ, னன்று தன்மக டனைம ணந்தவ னன்பின் மேவவ ளித்தனன். (௬௨)

அவளு டன்கலந் தனைய கூடல மர்ந்து பல்பக லான பின், றிவளி ராகவ பிரம கத்திசி தைத்த ளித்தரு ளீசனை. யுவகை யிற்றொழு வுன்னி யேகிவின் னூறுபொ ழிற்றிகழ் பூவணங், கவினும் வன்சுழி யன்மு ளும்பதி கண்டி றைஞ் சிக டந்தனன். (௬௩)

இவ்வ னஞ்செலு மவன்வி ழிக்கெதி ரேகி விண்ணொ ளிர் கோபுரஞ், செவ்வி யிற்றிகழ் சீர்த்தி கண்டரு ளீர்த்தி டத்தனி சென்றனன், அவ்வ யிற்பொலி யற்பு தத்திரு வருள்வ ளம்பல் கண்டனன், மெய்வி திர்ப்பொடு கைகு விப் புற விழிபு னற்றா மேனினன். (௬௪)

(வேறு.)

அத்திருத் தலத்தினி லறம்வ ளர்த்தவ
ளித்தன்வா கீசனோ டமர்ந்து நீடரு
ளூப்த்துவாழ் நலனுமுன் னுற்று நாமக
ணத்துநீர்த் தடங்கண்டு நயந்து மூழ்கியே. (௬௫)

வாக்கருள் பெற்றதும் வயங்கு மேனைய
வாக்கமு மாங்குளா ரறையக் கேட்டனன்
தேக்குபே ரன்புமேற் செலுத்த லாலவண்
வாக்கிறை வற்றொழ வாஞ்சை மல்கினான். (௬௬)

திருத்தளி மேற்றிசைத் திகழும் பாரதி
திருத்தமுன் போந்தருள் சேருஞ் சங்கற்பந்
திருத்தமொ டுரைத்தனன் சிந்தை சேர்தாத்
திருத்தனை யிருத்தியுட் சென்று மூழ்கினன். (௬௭)

தூயவெண் ணீற்றணி துலக்கி மேனியில்
வாயகண் மணிபுனைஇச் சந்தி வந்தனை
நேயமொ டாற்றியஞ் சலிசெய் நீள்கர
மேயவொண் சிரத்தனுப் விரைந்து சென்றனன். (௬௮)

வலமுறத் திருத்தளிக் திருமுன் வந்தனன்
மலர்சிவ பரத்துவம் வயங்க யாங்கணும்
குலசிவார்ச் சனைமுதற் குலவு ருக்கள்பற்
பலசெறி கோபுரம் பார்த்தன் பார்த்தனன். (௬௯)

இத்திருக் கோபு மிலங்கு வேற்படை
நித்தியன் றூன்மூ னின்று காட்டிய
சுத்தமெய் விச்சுவ ரூபத் தோற்றமே
யொத்திலங் குறுமென வுவகை பூத்தனன். (எ0)

ஆங்கொளி ருருவெலா மன்பி னோக்கியே
யேங்குறு முராரிகண் ணிடந்து வீழியிற்
றேங்கொளி யமலற்பூ சித்த சீர்த்தியுந்
தாங்கரன் சேவடி மறலி சார்ந்ததும். (எக)

அரியயன் றேடரீ ளருணை யோங்கலும்
சுரர்கடங் குறைசொலித் துன்ப நீங்கிவாழ்
வரலுற வணைவரும் வந்து நந்திதாள்
பாவியுண் ணிறைகயி லாயப் பான்மையும். (எஉ)

எரியல் கங்கையை யேற்ற சிருமேழ்
வாரிதி மதுரையுள் வந்த வாணையும்
வார்கழை கற்களி றுண்ட மாட்சியு
கார்மிடற் றிறை மணக் கோலக் காட்சியும். (எங)

பிரணவத் தைங்கரன் போந்த பெற்றியுஞ்
சரவணத் தருட்குகன் சார்ந்த சால்புமவ்
வரவணை யவன்பெணு யடுப்பச் சார்ந்தான்
றருவனஞ் சென்றது நடனந் தந்ததும். (எச)

சாற்றிரா கவன்சிவார்ச் சனைசெய் துய்ந்தது
மாற்றன்முப் புரத்துண்மூன் றாசர் திண்மைகண்

டேற்றருள் புரிந்தது மிளையன் வானவர்
மாற்றருஞ் சிறைவிடுத் திறைமுன் வந்ததும். (எரு)
சேய்பிர மன்றனைச் சிறையில் வைத்தவன்
வாயகந் தைச்சிறை மாற்றித் தந்தையின்
றாய்மடி யிருந்துதா ரகமத் தொல்பா
னேய்செவி தாழ்த்தலு மிசைத்த மாட்சியும். (எசு)
திருமுலை பொற்கிண்ணத் தளித்த சீர்த்தியு
மருவுகல் லம்பிவா ரிதிசெல் வாய்மையு
மொருமகன் முதலைவா யுதித்த வுண்மையும்
விரவுபுத் தொழி த்தருள் விளக்கு மேன்மையும். (எஎ)
இன்னன சிவபாத் துலமி லக்கியே
மன்னுமவ் விராசகோ புரத்து மல்குமந்
நன்னிலை யுருவெலா நயந்து கண்டிதே
தொன்னிக மாதிய வெனத்து ணிந்தனன், (எஅ)
துலங்குமக் கோபுர தூல லிங்கமுன்
னலங்கொளப் பன்முறை நமந்துள் புக்கவ்
ணிலங்கதி காரநந் தீசற் போற்றியவ்
வலங்கைவேத் திரனருள் வாய்ந்து வந்தனன். (எகூ)
வந்தரு ளோங்கரன் முன்வ ணங்கினன்
கந்தனை வழுத்தினன் கருணை நாயகி
முந்தறம் வளர்த்தரு ளன்னை முன்பணிந்
துந்துபஃ றுதிபுகன் றுடைய நாயகன். (அ0)

திருமூனூற் றவனெளி திகழி லிங்கத்தா
யருளுருக் காண்டனு மவச னுப்விழி
வருபுனல் பெருகுற வணங்கிப் பன்முறை
யிருகாஞ் சிரங்குவித் திடநின் றேத்துவான். (அக)

(வேறு.)

எந்தாய்பர மேசாநிறை யிமையோர்பணி நேசா
சிந்தாமணி தருவானிதி திகழ்வானுற நல்கு
மிந்தார்நதி 0செந்தாதித ழிகளேய்ந்தொளிர் வேணி
மைந்தாதிரு வாகீசர வள்ளாலருள் வாயே. (அஉ)

வேதாகம முதலாகிய வியனூலுரை விமலா
வாதாரமு மாதேயமு மாயாவையு மளிக்கு
மாதாவுமை நாதாவளர் போதாமலர் பாதா
மேதாபர வாகீசர விமலாவருள் வாயே. (அங)

ஆனுக்கடி யார்கள்குறை வற்றூர்நிறை வாழ்வின்
மருவிப்பொலி வுற்றுரெனும் வானோர்ந்துனை யடைந்தேன்
கருவிற்புகு தாமல்லுன கழல்வாழ்நல னுறுவான்
விரவுற்றொளிர் வாகீசர விமலாவருள் வாயே. (அச)

ஆறுற்றொளிர் சடையாயரி யழகுற்றொளிர் விடையாய்
தேறுற்றொளிர் நடத்தாய்பர சிவையுற்றொளி ரிடத்தாய்

---

0 செந்தாது—செம்பொன்.

மாறற்றொளிர் வலத்தாய்நிறை வளனுற்றொளிர் தலத்தாய்
வீறுற்றொளிர் வாகீசா விமலாவருள் வாயே. (அரு)

எல்லாமுடை மையுமாருயி ரெல்லாமடி மையுமென்
றெல்லாவுரை களுமோதுமெ யிசத்திருப் பேரே
யெல்லாருமு ணுதொப்புற லெறும்வேதமி லக்கு
மெல்லார்திரு வாகீசா வெளியேற்கருள் வாயே. (அசு)

பதியோர்பொரு ளேயாகுமப் பதியேயுமை பதிதான்
விதிமாலரி முதலோர்பசு வேயாமெனல் வேத
மிதிகாசமுஞ் சனனுநிபு மிலக்கும்மென வான்றோர்
துதிகூர்திரு வாகீசா தூயோயருள் வாயே. (அஎ)

வினைநேர்விருண் மலபாகமன் விரிபோருள் பதிவார்ந்
துனையேதொழு தரியாநிய ருனதாரரு ளலதொன்
றினைமேவில ரெனவேதுணி பிகவாதரு ணெறிசார்
முனையோர்துதி வாகீசா முதல்வாவருள் வாயே. (அஅ)

அயன்மான்முதல் வானோர்தொழ வருள்காவன்மு னுப
வியலார்தொழில் சேர்பேறுற வினிதாள்பர மேசா
கயலார்விழி யாண்மாதவி கருணாகரி நேசா
வியனுறொளி வாகீசா விமலாவருள் வாயே. (அகூ.)

வினையார்ந்திடு முயிரோர்ந்துயும்விழைவோங்கருண்மாதா
வினிதோம்புறு முமைசாம்பவி யிடனுர்ந்தெழிலார்கோன்

நனையார்ந்தித ழிபைவேய்ந்தவ னலனீந்தருள் வாகீ [ம்.
சனைநாந்தின முறைசார்ந்தரு டனைவாய்ந்தொளி சார்வோ
அடியாரிடர் சாராதருள் வதுவேபுரி தொழிலா
யுடையாயுனை யோவாதருள் கெனவோதுதன் மிகையே
0விடைகூர்விடை மேலாயொரு*விடையாவிருள்விளிவாம்
படியேயருள் வாகீசுர பவமோசன பரனே. (௬௧)

(வேறு)

என்று போற்றியி றைஞ்சினன் மேலுமுன்
னின்று வேண்டின னீடரு ணின்மல
மன்ற னோக்கித் தனஞ்சய மைந்தனே
நின்று நிக்கு நிறைமகிழ் வெய்தினம். (௬௨)

வேத வாகம மெய்ம்மைவி ளக்கமா
மாத லாவித் துதிதின மன்புமிக்
கோதி யப்பொரு ளோர்ந்துவ ழுத்துந
ராத ரத்தொடு கேட்குந ராதியோர். (௬௩)

இம்மை வாழ்நலம் யாவையு மெய்தியே
யம்மை யின்பமு மார்ந்துவர்ப் புற்றொரீஇச்
செம்மை யாயொரு வாதுதி கழ்தரு
மெய்ம்மை வீட்டின்பு மேவுவர் திண்ணமே. (௬௪)

நின்னொ டைவர்நி யமித்த நீண்முறை
தன்னை யோர்பக லீக்கலிற் சார்பழு

0 விடை—வேகம். * விடை—உத்தரவு.

துன்னை நீங்கியொ ழிந்தது தூயனீ
மன்னு தெவ்வொழித் தின்புற வாழுதி. (கூ௫)
நீவி ரைவரு நேர்சுவர்க் கத்தொழின்
மேவி யன்னது விடுறற் காந்தடை
யாவ தென்ப தநுபவத் தோர்ந்துவர்த்
தேவி ழுத்தவஞ் செய்தவைந் திந்திரர். (கூசு)
அனைய சோர்நிபத் தாற்புவி யாளா
செனவு திப்பவி சைத்தன மெம்பகை
தனையொ ழித்துடன் சார்ந்தருள் கென்றுநல்
விசய மோடுப ணிந்துமுன் வேண்டினர். (கூஎ)
அவ்வ ரம்முன் னளித்தன மன்னவா
றிவ்வ யின்னுமக் கேய்பகை நீக்குமா
செவ்வி திற்பிறர் தோவொ ணாதுநின்
றுய்வ கைச்செயன் முற்று முனூற்றுதும். (கூஅ)
கண்ண னும்முடன் காமுற் றடுத்துற
மெண்ண முற்ற வினையந்து துணைபுரிந்
தண்ணி நிற்கின் றனனென் றகிலமோர்
வன்னம் வைத்து ளியக்கி வயக்குதும். (கூகூ)
நாமு ரைத்தவா நீநின் னலிபகை
0சாமு ருக்குச மரின்முன் சார்ந்துநா
மேமு ருக்குதல் காண்குதி *யெய்கண்ண
னீமு தங்கொளக் காட்டுவ னேரினில். (க00)

---

0 சா—சாகும்படி. * எய்கண்ணன்—அறிந்தகண்ணன்.

பேதில் வாழ்வுற் றடுத்த பிறப்பினி
லேதி லாறு தினத்தி லிருண்மல
†மாதி வேட்டை வினைசெய் தடர்த்துநம்
பாத நீழற்பே ரின்பம் பருகுதி. (கOக)

பார்த்த நீவிழை பண்புறு சேதுநற்
றீர்த்தந் தோய்ந்துரா மேசமு தற்றிக
ழோர்த்த மாதல மெய்தியி றைஞ்சிநின்
சீர்த்த மாநகர் சென்றவண் வாழுக. (கOஉ)

(வேறு.)

என்றுவா கீசா ரியம்ப வர்ச்சுனன்
றுன்றுபே ரின்பமா நாலை தோய்ந்துடன்
முன்றொழு தஞ்சலி முகிழ்த்துச் சென்னிமே
லின்றருள் கருணைநா யேன்ற ரத்ததோ. (கOங)

அன்னலே யெளியனை யாண்ட வங்கண
பன்னறம் வளர்த்தரு ளன்னை பாகநின்
வன்னருட் கேழைகைம் மாறென் றுண்டுகொ
லென்னினு மமையுமோ வென்றி றைஞ்சினன். (கOச)

பிரிவரு மன்புறப் பேணி யொவ்வொரு
வருநெறி வாயிறோ றிறைஞ்சி வாழ்த்தியப்

† ஆதி—ஆதியை.

பொருவருங் கோயிலின் புறத்துப் போந்தன
திருநக ரிடையொரு வசதி சேர்ந்தனன். (௧௦௫)

அங்கினி தமர்ந்தறம் வளர்த்த வன்னையை
பங்கம ரண்ணலைப் பாவி நாளுமார்
வங்கொடு தங்கிவா ரிச வள்ளலா
ருங்கரு ளாணைநா மறத்த லொல்லுமோ. (௧௦௬)

என்றுசந் நிதிபணிந் தேவி மால்பணி
துன்றுரா மேசம ரகதத் தொன்மணி
மன்றன்வா ழுத்தர கோச மங்கைமுற்
சென்றடி பாவித்தன் னகாஞ் சேர்ந்தனன். (௧௦௭)

ஆங்கணும் போறம் வளர்த்த வன்னையைப்
பாங்குவா ரிசனைப் பாவி நாடொறு
நீங்கரு நியதியி னிகழ்த்தி வந்தனன்
றோங்கழி விசயனுந் தூய வேந்தனே. (௧௦௮)

இவன்சரித் திரம்விரித் திசைக்கும் பாரதம்
இவன்வசித் திறைஞ்சலி னின்ன மாதலம்
திவளுறு விசயமா புரமென் சீர்ப்பெயர்
நவிலுறப் பெற்றது முன்னை நாளரோ. (௧௦௯)

---

ஆகத் திருவிருத்தம் ௨௪௬.

# சோழபுரப் படலம்.



விரைசெய் பூம்பொழில் சூழுமித் தலமுனாள் விசய
புரமெ னும்பெய ரால்விளங் கியதலம் புகன்றும்
உரைசெய் சோழமா புரமெனும் பெயருமிக் கொளிர்சீர்ப்
பொருவி லித்தலம் பூண்டமான் மியமினிப் புகல்வாம். (க)

(வேறு.)

உலகெலா மிருளற வொளிப ரப்புசீர்
நிலைசிவ னருளினா னிலவப் பெற்றவன்
வலமலர் விழியென வயங்கு மாண்புறீஇச்
பலர்புகழ் செங்கதிர்ப் பண்ண வன்முனாள். (உ)

உலகினர் முறையொரீ யுஞற்று தீமையி
னிலகுறத் தெரிந்தவைக் கியற்று தண்டனை
நிலைபுரீஇத் திருத்திநன் னெறிநி றுத்துவான்
வலமனு வெனுமொரு மைந்தற் றந்தரோ. (ங)

அவனியி லிருந்திமற் றறிக ராவகை
தவறுசெய் பவர்க்குறு தண்டஞ் செய்கென
நவின்0மற லென்றொரு மைந்த னல்கியே
இவள்யம புரத்தினிற் சேர்த்து வைத்தனன். (ச)

---

0 மறலிஎன்பதீறுகெட்டு மறலென நின்றது.

அவ்விரு மைந்தரி லவனி வைகிடுஞ்
செவ்வியன் மனுவெனுஞ் சீர்த்தி வேந்தனத்
திவ்விய ரும்புகழ் கவுட தேசத்தி
னுய்வா சிருந்துல குய்யு நாலொன்று (ரு)

அரசர்க ளோம்புதல் குடிக ளவ்வா
சுரைசெய லடங்கிநின் றுஞற்ற லாதியா
விரிபல நீதிகள் வேத மாதிநூன்
மரபினி லியற்றித்தன் பெயரின் வைத்தனன். (சு)

அனையவன் மாபில்வந் தவனி யம்முறை
யினிலா சியற்றியவ் விதஞ்செய் வேந்தரின்
மனுமுறை யினுமுயர் வாய்மை யோர்ந்துசெய்
தனிதிகழ் நீதிமே னடத்தி னோர்பலர். (எ)

இந்நிறை சோழர்க ளிருங்கு லத்தினில்
மின்னொளிர் மணிமுடி வீர சேனன்முன்
மன்னினன் மனைவிசி மந்தி னிப்பெயர்
பொன்னுடன் பொலிநிசு ளாபு ரத்தினில். (அ)

வீரசே னன்புரி தவத்தின் மேதகு
பாரிசி மந்தினி வயிற்றிற் பாரெலா
மாரா சியற்றுசோ ணுக்க னும்பெய
ரோரிள மைந்தன்வந் துதித்து ளானரோ. (கூ)

அன்னவன் வளர்ந்துதன் மாபுக் காஞ்செய
லென்னவுந் தேர்ந்துமிக் கிலங்கு மாண்புறு
நன்னிலை நிறைந்தனன் றந்தை நாடியே
தன்னர சவன்புயந் தரிப்ப வைத்தனன். (௧௦)

ஆசிய லாற்றுசோ ணுக்க னுற்றல்கூர்
தருநிலை மாண்பினு லேனைத் *தண்ணடை
நிரையெலாம் வென்றுதன் னுணை நீடவுய்த்
திருநிலம் பொதுக்கடிந் தாள வெண்ணினுன். (௧௧)

எண்ணியாங் கெய்துதற் கிமாச லேசைகோன்
தண்ணருள் பெறவிழைஇப் பற்ப றண்ணடைப்
புண்ணிய தலம்பல போற்றி மீண்டனன்
நண்ணுபன் னலந்திகழ் சோழ நாட்டினில். (௧௨)

(வேறு.)

மூவர் சீர்த்திரு வாக்கினின் றுலகுப 0முதல்வன்
தேவி யற்றமி ழாற்றரு வேததே வார
மேவு றுந்திருத் தலம்பல சிறந்துமிக் கொளிரு
நாவ லோர்பா வுந்திருச் சோழநன் னுடு. (௧௩)

0 முதல்வன் மூவர்வாக்கினின்று ஆரியவேதசாரமாகத் தெய்வத்தன்மை வாய்ந்த இயற்றமிழ்மொழியாற்றந்தருளிய சீரியவேதமாகிய தேவாரம்பெற்ற திருத்தலங்கள், ஏனைநாடுகளிலும் பன்மடங்கு மிகுதியாய் விளங்கும் சோழநாடென்க.

---

* தண்ணடை—நாடு.

விரியும் பற்பல்வே தாந்தயா முபநிடம் விளக்கும்
பொருள்க டாற்பரி யத்தினெனத் தலைவலயெலாம் புனித
வானி லாவுசை வத்தினே சார்திரம் வயக்குந்
துரிய மெய்த்திரு வாசகத் தலம்பல துலங்கும். (கச)

பலவகைகளாய் விரிந்துள்ள வேதாந்தங்களின் சாரமாய், அவ்வுபநிடதங்கள் ஒவ்வொன்றும் விளக்கும் உபசாரநிலையவாகிய ஒவ்வோர்வகைப் பொருள்களும் தாற்பரியத்தால் சுத்தாத்துவிதசித்தாந்த சைவநெறியிலேயே வந்து முடிவுறுந்திறத்தை விளக்குவதாய்த், துரியநிலையதாயுள்ள உண்மைப்பொருள்வாய்ந்த திருவாசகம்பெற்ற திருத்தலங்கள் பற்பல அச்சோழநாட்டில்துலங்குமென்க,

இன்ன மாண்புறு திருத்தமிழ் வேதங்க ளிசைக்கு
நன்னர் வாய்ந்துமிக் கொளிர்தரு பெருந்திரு நலத்தின்
மன்னி மேலுநீர் நாடெனுங் காரண வண்பேர்
தன்னை மன்னிடு குறியெனச் சார்ந்ததந் நாடு. (கரு)

எல்லா நாடுகளும் நீருள்ளநாடுகளாகவும், நீர் நாடென்னும் காரணப்பேரைத் தனக்குமாத்திரம் இடுகுறியாய் வழங்கப்பெறும் மகிமைசார்ந்தது அச்சோழநாடென்க.

நமது பாண்டிநன் னாட்டட னன்மணக் கலப்பி
னமைதி வாய்ந்துடன் றழீஇக்கொடு நின்றிடு மடைவா
துமையொர் பாகசுந் தரனையச் சோழர்வந் துவந்தெச்
சமய முந்தடை யறத்தொழுந் தகைய*தந் நாடு. (கசு)

* அந்நாடு—அச்சோழநாடானது பாண்டிநாட்டரசர்கள் சோழராஜபுத்திரிகளை நன்மணம்புரிந்துவாழக் கொடுத்து அக்கலப்

பினுல் நாயகமாகிய நமது பாண்டிநாட்டுடன் நாயகிமுறையில் தழு விக்கொண்டு நிற்றலால் அச்சோழர்கள் எப்போதுந் தடையின்றி வந்து சுந்தரேசனைத் தொழுந்தகைமையதென்க, சோழராசன் ராசபுரந்தரபாண்டியற்கு வரிசைகளனுப்பித்தழுவிக்கொண்டு அவன் தம்பிக்குத் தன்புத்திரியை மணமுறையிற்கொடுத்ததும் நெடுமாறர் சோழபுத்திரியாராகிய மங்கையர்க்கரசியாரை மணந்ததும் ஈண்டுக் கூறிய சோணுக்கனென்னும் சோழன் தன்மகளை வாகுணபாண்டியர் மணப்பச்செய்ததும் முதலியவைகளால் பாண்டிநாடும் சோழநாடும் நாயகநாயகிமுறையில் தழுவிநிற்பது காண்க.

என்ன நாட்டினு மேதகு தைவிக வியற்சீர்
மன்னு பாண்டிநாட் டுடனொரு வாநண்பு வாய்ந்து
நன்ன லந்தரு மனையசோ ணாட்டினின் னுயிராய்ப்
பொன்னி மாநதி திகழுமெவ் வுலகமும் போற்ற. (கஎ)

ஆதி நாயக னமரர்க ளுபக னவிர்நால்
வேத நாயக னிமாசலை நாயகன் விரிதண்
சோதி நாயகன் கயிலையிற் றூயவா ரருளே
யிதெ னச்சிவ தீர்த்தமொன் றிலங்குமவ் 0வமுதம். (கஅ)

தன்னை யாங்குவந் திறைஞ்சிவேண் டுறுதபோ தனனுந்
தன்னை நேர்திறற் கும்பசற் கனையதண் கயிலை
மன்ன ளிப்பவக் குறுமுனி மந்திர மயமாய்
மன்ன லத்தசீர்க் கமண்டலத் தேற் றுவந் ததனை. (கசூ)

---

0 அமுதம் தன்னை அளிப்பவென்றியையும்.

சைய வெற்பில்வைத் தருட்சிவ நியமபூ சனைமுன்
செய்ய வப்பொழு தொப்பிரி திப்பிய பதியாந்
துய்ய காழியி லிந்திர னந்தனந் துலங்க
வுய்ய வாபத்து நீத்தருள் கணேசனுங் குற்றே. (உ0)

அனைய மாமறுக் கமண்டலோ தகத்தினை யவிரும்
புனித வாயச ரூபனுப் போந்துசாய்த் தருள
வினிய வப்புன லம்மலை யுச்சிநின் றெவரு
மனிது திப்பவந் திப்புவி பொற்புற நடந்து. (உக)

புகலி நந்தனம் புகுந்துபூப் பல்குமா புரிந்து
நிகரில் காவிரி பொன்னிமுற் பெயர்பெறீஇ நிலவுந்
திகழு மந்நதித் துறைகளெவ் வெவற்றினுஞ் சிறந்த
தகுதி வாய்ந்தது தூயசிந் தாமணித் துறையே. (உஉ)

இன்ன சீர்த்துறைச் சிறப்பிதன் பெயரினு மிலங்கு
மென்ன ரும்புகழ்ந் தோதுவர் சிந்திக்க வெல்லா
மன்ன வாறொரு வாதினி 0தருண்மென வனைய
சென்னி சேர்திருத் துறையது திருச்சிராப் பள்ளி. (உந)

இத்தி ருச்சிராப் பள்ளியு நீசியி லிருநீர்
வைத்த சென்னியன் முற்றுநீர் வடிவனுய் வயங்க
கைத்த லத்தினுற் றிரட்டியங் கண்ணுமை முன்பூ
சித்த வானைக்கா வெனுந்திருத் தலமணி திகழ. (உச)

---

0 அருண்மென—ஓதுவரென்க.

திருச்சிராப்பள்ளியானது, அவிரும் எனப் பின்வரும் (உஎ-ம்) பாட்டிறுதியுடன்முடியும். நீர்வைத்த சென்னியனைமுழுதும் நீர்வடிவனாய் வயங்கும்படி, உமையம்மை, தன்கையினால் நீரையே சிவலிங்க ரூபமாகத் திரட்டிவைத்து முதலிற் பூசித்தருளிய திருவானைக்காவென்னும்திருத்தலமாகியஇரத்தினம் உதீசியில்—வடக்கில்திகழவும்

சாதி யாலுயர்ந் தனமென வத்தனை தருக்கும்
பேதை யோருமன் புயர்நிலை தேர்ந்தது பேணி
ஏத நீக்குய வெறும்புக்கு மருளெறும் பீச
மேத குந்திருத் தலமணி பிராசியில் விளங்க. (உ௫)

அன்பு அறிவு ஒழுக்கமுதலிய நன்மை யாதுமில்லாதிருந்தும் நாம் சாதியாலுயர்ந்தனமென்று அச்சாதியளவிலேயே தருக்கடைகின்றமூடர்களும், அன்பினது உயர்நிலைதெரிந்து அதனையேபேணிச் சாதியகந்தைநீங்கிப் பணிந்துநின்றுய்தற்காகவே ஒரு சிற்றெறும்புக்கும் அன்புநோக்கி அருள்புரிந்ததிருவெறும்பீச்சுரமாகிய திருத்தலரத்தினம் பிராசியில்—கிழக்கில் விளங்கவும்.

அருவ ரங்கமு முடையர்மெய் யன்பருக் களப்பி
லருவ ரங்கனல் கமலரம் புயாசன 0ரகலத்
திருவ ரங்கழ றொழுவருள் பரமர்வாழ் சீர்த்தித்
திருவ ரங்குள மணியவா சித்திசை திகழ. (உ௬)

0 அகலத்திருவர்—மார்பில் இலக்குமியையுடையவர். திருவரங்குள மாகிய திருத்தலரத்தினம் அவாசியில்—தெற்கில்விளங்கவும்.

ஒரு மாண்பெலா மொருவுரு துறைதலி *றுறையூர்ப்
பேரு றும்பதி மணிபிர நிசியிற் பிறங்க
வேரி லங்குசிர் நடுவிஞ யகமணி யெனவே
பாரி லெங்கணுந் தன்னொளி பரப்பிநின் றவிரும். (உஎ)

* உறையூரென்னும் திருத்தலரத்தினம் பிரதீசியில்—மேற்கில் விளங்கவும், இத்திருத்தலங்களாகிய சூழ்மணிகளுக்கு நடுவில் நாயக மணியாய்எங்கும் தன்மகிமாவிசேடப்பிரகாசத்தைப்பரப்பிக்கொண்டு நின்று விளங்கும். (வேறு.)

எச்சம யங்களு மிறைஞ்ச வின்னவற்
றுச்சிநின் றொளிர்சைவத் துண்மை யாவரு
நிச்சயித் தோர்ந்துய நீடு நான்மறை
யிற்செறி பொருள்வடித் திலக்கு நால்வர்கள். (உஅ)

திருவருள் பொழிதிரு வாக்கிற் றேக்கிவந்
திருளிரித் தருளொளி யிலக்கு செந்தமிழ்த்
தெருண்மொழி வேதங்கள் சீர்ப்பு ராணங்க
ளருளிரு மொழியறி வாற்றல் சான்றசீர். (உகூ)

மருவுறு பெரும்புல வோர்வ ழுத்துமாண்
புரியபன் னூலெலா மோது சீர்த்திவாய்ந்
தொருவிராட் டுச்சிமேன் முடியி னேங்குமாற்
பாவுசிர் திகழ்0சிராப் பள்ளி யோங்கலே. (௩0)

0 சிராப்பள்ளி மலையானது, நால்வர் திருவாக்குக்களினின்று பெருக்குற்றுவந்து, உலகில் அன்னியசமயவிருளிரித்துச் சுத்தாத் வித சித்தாந்த சைவத்திருவருளொளியே எங்கும் விளக்குகின்ற செந்தமிழ்வேதங்களும், வேதப்பொருள் விளக்கும் சிறப்புடைய புரா ணங்களும், மேலும் அவ்வடமொழி தென்மொழிகளாகிய இருமொழி களை நன்காராய்ந்த அறிவும், ஆங்காங்குள்ள உண்மைப்பொருள்களை அவற்றிற்குரிய எதுமுதலியன எடுத்துக்காட்டி அசைவற நிறுத்தும் ஆற்றலும் நிறைந்த பெரும்புலவோர் மேற்கொண்டுவழுத்தும் மாண் புடைய பலநூல்களுமாகிய எல்லாவற்றாலும் புகழ்ந்தோதப்படும் சீர்த்திவாய்ந்து விராட்டுவென்னும்பேரரசன் முடிமேலுள்ள திவ்விய ரத்தின மகுடம்போல் உயர்ந்து விளங்குமென்க.

நீலமுண் டதும்வெள்ளை நிறத்த தாமென
வாலிய சிவபாத் துவத்தின் வாய்மையை
யேலுறக் †காழிச்சே யிலக்கு பாசுரச்
சிலமந் திரத்தது திருச்சி ராப்பள்ளி. (ருஉக)

† காழிச்சேயாகிய ஞானசம்பந்தர், "கொலைவரை யாத கொள் கையர் தங்கள் புரமூன்றுஞ், சிலைவரை யாகச் செற்றன ரேனுஞ் சிராப்பள்ளித், தலைவரை நாளுந் தலைவரல் லாமை யுரைப்பீர்காள், னிலவரை நீல முண்டதும் வெள்ளை நிறமாமே." என்றருளியதிருப் பாடலில், வேதசிவாகம புராணேதிகாசாதி விசேட நூல்களெல்லாம் விதந்தெடுத்தோதுகின்ற முழுமுதற் றலைவராகிய சிவபிரானைத் தலை வரல்லரென்றே தினந்தோறும் நியமமந்திரம்போலக்கூறும் பாதகர் களாகிய சிலரைநோக்கி, திரிபுரத்தசுரர்கள் செய்யும் பெருந்துன்பங்

கனே மாற்றிக்கொள்ளமுடியாததலேந்துவருந்திய பிரமவிஷ்ணுவாதியர் அடைக்கலம் புகுந்து பணிந்து வேண்டிக்கொண்டதற்கிரங்கி அவ்வ சுரப்பகைவயை நீக்கி அப்பிரம விஷ்ணுவாதியரைக் காத்தருளிய பெருந்தலேவராயிருந்தும் அந்த சிராப்பள்ளித் தலேவரைத் தலேவரல் லாத தன்மையரென்று தினமுங்கூறும் பாதகர்களே நீங்கள் தலேவ ரெனக்கொண்ட விஷ்ணுவானவர், இன்னதுவருமென முன்னரே தெரிந்துகொள்ளும் அறிவுமின்றி அமுதம்பெறுமாசையாற் கடல் கடையப்புகுந்து, அவ்வமுதம் பெறுதொழிந்ததுமன்றி, உயிர்க்கும் இறுதிபுரியும் வலியினதாய் விஷவெள்ளம்வர, அதனேமாற்றிக்கொள் ளும்ஆற்றலுமின்றி, அவ்விஷவெப்பத்தால் 'நீலமுண்டதும்' வெந்து கருமையுற்றதும் 'வெள்ளை நிறமாமே' அவாது வெள்ளைநிறமேனியா மன்றே! பின்னர் அவ்விஷந்தூத்தலால் ஆற்றுதோடிக் கயிலேயே கதியென்றடைக்கலம்புகுந்து ஓலமிட்டலற அவ்வாபத்துக்கிரங்கிச் சிவபிரான், தானேயாயசுந்தரரை ஏவ, அவர், அவ்விஷவெள்ளத்தின் முன்புவந்து தமது திருக்கரத்தை நீட்டியருள, அவ்வெள்ளம் நாவற் கனியளவாயொடுங்கி அக்கரத்துவர, அவர்கொண்டுவந்து கொடுப்ப அவ்விடத்தைத் தமது கண்டத்துவைத்து அவ்விஷ்ணுவாதியருயிர் காத்தருளியவர் அச்சிவபிரானன்றே! பின்புசிவபிரான் அவ்விஷ்ணு வைநோக்கி நீவிக்கினேசபூசனையின்றிக் கடைந்தமையால் இவ்வாபத் துற்றது இனி அப்பூசனேசெய்துகடைக அமுதங்கிட்டுமென்றருளிய ஆணேசிரமேற்கொண்டு அவ்வாறுபூசித்துக்கடைந்து இடரின்றி அமு தம்பெற்றும்,கடைந்துவருந்திய அசுரர்க்கும்தமதியற்கைவஞ்சனேயால் அவ்வமுதமுதவாது தேவர்க்குமாத்திரம் அவ்வமுதமளித்தவர் உங்கள் விஷ்ணுவேயன்றே! இவ்விரிவெல்லாம் பாகவதாதிகளிலும் விளக்க

மாயிருக்கவும் முழுமுதற்றலைவராகிய சிவபிரானைத் தலைவரல்லரென் றும், அத்தலைமையில்லாத விஷ்ணுவை முழுத்தலைவரென்றுங்கூறும் உங்களுக்கு, "நீலமுண்டதும்" கருமையும், "வெள்ளை நிறமாமே" வெண்மை நிறமாகவே தோன்றும். அஃது உங்கள் போகூழின் புணர்ச்சிவலியேயாமென்பது முதலிய அரும்பொருணயங்களமைய வைத்து விளக்கியருளினரென்க.

பற்பல மந்திர பாசு ரங்களி
னற்புத சைவத்தி னருணலங்களே
சொற்பொருள் விளக்குமெத் தூய சேயினேர்
பொற்பதி கத்தது புகழ்சி ராப்பள்ளி. (கஉ)

அத்தூயசேயின், ஞானசம்பந்தரது, பற்பலமந்திரவாக்கியங் களமைந்த திருப்பாடல்களிலுள்ள சொற்பொருள்கள் சைவநெறி யின் அருள்நலங்களையேவிளக்குகின்ற ஒருதிருப்பதிகத்தை இப்போ துடையது அத்தகைய சிராப்பள்ளி என்க.

ஐவரி னாட்டுணு தகிலம் போற்றிநின்
றுய்வகை யெம்மையா ளுடைய நாவர
செய்வளி காட்டுவா னிசைத்த வற்றுளோர்
தெய்விகப் பதிகம்வாய்ந் ததுசி ராப்பள்ளி. (கங)

நாவரசு, எவ்வழி—அறியத்தக்க உண்மைநெறியைக் காட்டும் படி இசைத்தருளிய திருப்பதிகங்களுள்ளே, ஐவராலாட்டுணுமைல் உலகெலாம் திருச்சிராப்பள்ளியைப்போற்றிநின் றுய்யும்படி,"அரிச்சி ராப்பக லைவரா லாட்டுண்டு, சுரிச்சி ராதுநெஞ் சேயொன்று சொல்

லக்கே, டிருச்சி ராப்பள்ளி யென்றலுந் தீவினை, நரிச்சி ராது நடக்கு நடக்குமே," என்பதுமுதலிய திவ்வியமந்திரபாசுரங்களமைந்த ஒரு திருப்பதிகத்தையுடையது திருச்சிராப்பள்ளிஎன்க.

0அகியா கடன்முன மனில னுற்றன்மிக்
கிகலிமே ருவினுச்சி யிற்ப றித்தெறி
சிகாமுன் றினிலொன்று சென்று தங்கியே
திகழுமோங் கலையுடை யதுசி ராப்பள்ளி. (கூச)

*அரிவலி யடக்கியா ளசுரர் கோமகன்
றிரிசிர னென்றொரு திறன்மிக் கான்முன
மருவியாங் கமலனை வழுத்தி வைகுபேர்
தெரியுமப் பெயரது திருச்சி ராப்பள்ளி. (கூரு)

அகத்திய ராதிய ரரிமு னுஞ்சுரர்
மிருத்தகதம் வேட்கைகள் விரவ வேண்டுபு
சுகத்திரு நலனெலாந் துதைய நல்கியே
செகத்தொளிர் கின்றது திருச்சி ராப்பள்ளி. (கூசு)

அரியய னுதியர்க் கதீத னுகியுங்
கருநிறை யொருமகள் கருவு யிர்த்திடற்
குரிமருத் துவத்தொழி லுஞற்று தாயுமாய்ப்
பரனருள் வரனது பகர்சி ராப்பள்ளி. (கூஎ)

ஆணலன் பெண்ணல னா ணுதிநேர்
காணல னெவற்றையுங் கடந்த பேரொளித்

அகி—பாம்பு. * அரி—பகை.

தானுவே தாயுமாய்ச் சார்ந்து நல்குசீர்
மானுமித் தலநலன் வழுத்தற் பாலதோ. (௩௮)

(வேறு.)

இத்தகுசீர் மேலுமளப் பில்லனவாய்த் திலங்குதலோர்ந்
தித்தலனே நமக்கென்று மினியரசுக் குரித்தாகி
யெத்தகையநலங்களும்வாய்த்திலங்குவதென்றுளங்கொண்டா
னெத்தலமு மிறைஞ்சுமலை யெழிற்றிருக்கோயில்புகுந்தான்.

அனைபதிரு மலைபுச்சி யமர்ந்தருளி யாவருந்தம்
வினைகிறையப் பணிந்தேத்தும் விக்கினநா யகற்பணிந்து
நனிபாவித் தன்னுளத்து நயந்தனமுற் றுறப்பெறுவா
னினிதருடி யெந்தாய்நீ யெனவேண்டிக் கொண்டேகி. (௪௦)

வாயுமியன் மணங்கமழு மீட்டுவார் குழலம்மை
சேயடிகள் பணிந்தேத்தித் திருவருள்வேண் டுபுசென்று
தாயுமா னவர்திருமுன் சார்ந்துபல முறையிறைஞ்சி
நேயமிகத் துதித்தொருவா நிலையினனுய்ப் புறம்போந்தான்.

அரசியலுக் கின்றியமை யாதவர ணுதியவாய்
விரிதருபற் பலவகையின் விளங்குறுப்பெ லாம்பொலிந்து
மருவவமைத் தத்தாணி மணியரியா சனத்தமர்ந்து
பரவரசர் பணியாற்றும் படியாற்றல் புரிந்தளிப்பான். (௪௨)

நீதியினி லரசியற்று நிலைமையிற்பற் பலதொழில்க
ளாதரவா லிடையறு தடுத்திடவு மவற்றினுமோர்

கோர்தனுகா வகையியற்றிக் குலமறைக ளோடுத்தோது
மாதொருபா கன்கழலின் வளரன்பு பெருகுதலால். (சங)

வழுவாது நாடோறு மட்டுவார் குழலம்மை
தழுவாநின் றொளிர்பாகத் தாயுமா னவர்கோயி
றெழுவாய்மைநியதிபுமேற் றொடர்புறச்செய்தெஞ்ஞான்று
மெழிலாருஞ்சிராப்பள்ளி யினிலமர்ந்தான்சோணுங்கன். (சச

இவ்வரிய நியதியனு யிருந்துமடுத் திலங்குதல
மொவ்வொன்றின் மகிமைபுமோர்ந் துளமுருகி னிபார்வந்
தெப்விகமாண் புறுவாய்மைத் திருவானைக் காவினுறு
மவ்வியல்பா லான்மார்த்த மதுவேயென் றுளந்துணிந்தான்.

(வேறு)

அன்பிலா லந்துறை வடக்கி லார்கிழக்
கின்பெறும் பீசந்தெற் கெழிற்சி ராப்பள்ளி
நன்புறு கற்குடி மேற்கி னண்ணுற
மன்பொலி தருநடு மணியி னானைக்கா (சரு)

பாவுகா ழியின்மணி பதிக மூன்றர
சுரைபதி கங்கண்மூன் றுடைய நம்பிசீ
ரருணிறை பதிகமொன் றுக வேழுடைத்
திருமையே முலகும்போற் றிசைமல் கானைக்கா. (சஎ)

அயனினை வற்றன வாத *மன்பனை
யுயநினை குலமக ணிலையு ணர்த்துமங்

நயமுத லிலக்கிநங் காழி நாதனும்
பயனுறப் போற்றுசீர் படைத்த தானைக்கா. (௪அ)

* அன்பன் — நாயகன். நாதராகிய சம்பந்தர், தாம்பாடியருளிய அப்பதிகங்களில் நாமெல்லாம்பயனுறும்படி, அயல்நினைவின்றிஇடையறாது தன்நாயகனையே தானுய்யும்படி நினைந்து நின்று உரியதொண்டுபுரியும் குலமகளின் கற்புநிலையுணர்த்தும் அந்நயமுதலியவற்றால் பிரம விஷ்ணுவாதி தேவர்கள், சிவனருளாற் சிருட்டி திதியாதிய தொழிற்றலைமை பெறினும் அத்தலைமையுபசாரமே, அவரெல்லாம் பிறப்பிறப்பாதியிற்படும் மும்மலசகிதர்களாகிய சீவர்களேயாதலால், "சென்று நாஞ்சிறுதெய்வஞ் சேர்வோமல்லோஞ் சிவபெருமான்றிருவடியே சேரப்பெற்றோம்" என வாகீசசுருதி விளக்கியபடி அச்சிறுதெய்வங்களாகிய அன்னியதேவ நினைவின்றி, அநாதிமலரகித பரமபதியாகிய சிவனொருவனையே அனவரதமும் நினைந்துய்யும் நயமுதலியவற்றை இலக்கிப்போற்றிய சீர்படைத்தது திருவானைக்காவென்க.

உனையடைந் தவர்துய ரணுவு முற்றில
ரெனுமியல் றன்னில்வைத் தென்செய் கேனெனு
மனுவிலத் துனிபொருள் வயக்கி நாவர
சினிதுபோற் றிருஞ்சிறப் பியைந்த தானைக்கா. (௪௯)

நாவரசு, "திருவானைக்காவுடைய செல்வாவென்ற, னத்தாவுன் பொற்பாதமடையப்பெற்றே னல்லகண்டங்கொண்டடியே னென்செய் கேனே" என்னும் மந்திரத்தால், அத்தனே உன்னையடைந்தவர்கள் அணுவளவு துன்பமுமிலரென்னுமியல்பைத்தன்னில்வைத்து இனிதுபோற்றிய திருவானைக்காவென்க. அல்லகண்டம்—துன்பம்.

உன்பாதம் அடையப்பெற்றேன்; அதனுல் துன்பம் ஒருசிறிதுமில்லேன்; ஆதலால் அது குறித்து யாதுசெய்யவேண்டியவன் துன்பமென்பதே சிறிதுமில்லாதபோது அதனை நீக்கியருளும்படி வேண்டல் முதலிய செயல் நிகழ்வதுண்டோ? ஆதலால் அதற்காகச்செய்யவேண்டிய தொன்றுமில்லை என்பதே "என்செய்கேன்" என்றருளிய மந்திரவாக்கின் துணிந்த கருத்தாமென்க. கொண்டு ஈண்டுக்குறித்து என்னும் பொருட்டு. "அடையப்பெற்ருல்" என்பதும் பாடம்.

உமைபுன லிலிங்கமாத் திரட்டி யுன்னிவைத்
தமைசெழு நீர்த்திர ளையென் ருய்சொலி
னமருணர்ந் துய்யுமா நாவின் வேந்திலக்
கிமைதரு சீர்த்திவாய்ந் திலங்கு மானைக்கா. (ருO)

நாவின்வேந்து "செழுநீர்த்திரளைச் சென்ருடினேனே" என்று (ஆய்சொலின்)ஆராய்ந்துண்மையறிந்துகோடற்கிடந்தந்தருளிய மந்திரவாக்கினுல் உமையம்மை திருக்கயிலையினின்று சிவாஞ்ஞையால் ஞானக்ஷேத்திரமாகிய தன்னிடத்துவந்து, அங்குள்ள ஒன்பதுதீர்த்தங்களின் முதலாவதாகிய பிரமதீர்த்தத்துள்ள நீரைத்திருக்கரத்தால் அள்ளி அதனையே சிவலிங்கமாகத்திரட்டித் தியானித்துத்தாபித்தமையை நம்மவருணர்ந்து அச்சிவலிங்கமகிமாவிசேடந்தெரிந்து வழிபாடுசெய்துய்யும்படி இலக்குகின்ற பிரகாசச் சிறப்புவாய்ந்தது மேற்கூறிவந்த ஆனைக்கா என்க.

அடியவர் மகிமைதேற் ருர்வத் தெம்மையா
ளுடையவ ரெனச்சிவ னுருவ ளுகியும்
புடவியுய் வுறுதற்கே போந்த நம்பிபோற்
றிடுசிறப் பெய்திமிக் கிலங்கு மானைக்கா. (ருக)

சிவரூபராயிருந்தும் பூமியுய்தற்காகவே நரரூபராய்வந்தருளிய சுந்தரர், சிவமாந்தன்மைப் பெருவாழ்வுபெற்ற அடியவர்களின்மகிமை தேற்றும் ஆர்வத்துடன் "இறைவனென் றடிசேர்வாரெம்மையு மாளு டையாரே" என்பது முதலிய தமிழ்வேதமந்திரங்களாற் போற்றிடு சிறப்பெய்தி மிக்கிலங்குமானைக்காவென்க.

அம்புமா முனிவர்தஞ் சென்னி தன்னினீள்
சம்புதா ருவையுமை யருளிற் சார்த்தவச்
சம்புநீ ழலினென் றுந் தங்கி வாழ்சிவ
சம்புவிற் றிருந்தரு டருவ தானைக்கா. (ருஉ)

இத்தலத்தில் தவஞ்செய்திருந்த சம்புமுனிவர், தம்முன்பு ஒரு வெண்ணாவற்கனி விழக்கண்டு அது, எவ்வுலகத்துங்கண்டறியாத அற்புத நிலையதாய் விளங்கலால் அதனை எடுத்துக்கொண்டு திருக் கயிலையடைந்துபணிந்து சிவபிரானுக்கு நிவேதிப்ப, அவர் அதனை யுண்டு விதையை உமிழுங்கால் அதனை இருகாமும்நீட்டி வாங்கிப் பற்படாமல் விழுங்கினர். அவ்விதை முளைத்தெழுந்து அம்முனிவர் சிரமேல்வளர்ந்து வானுங்கடந்துசென்று பெருவிருக்ஷமாய் விளங்கி யது. அம்முனிவர் சிவாஞ்ஞைபின்படி இத்தலந்துவந்து தவஞ் செய்திருந்தனர். பின்னர் உமையம்மையார் இங்குவந்து நீரையே சிவலிங்கமாத் திரட்டித்தாபித்துப் பூசிக்குங்கால் அவ்விலிங்கத்துக்கு நிழல்செய்யும்படி அம்முனிவர்க்கு ஆஞ்ஞாபித்தனர். அவ்வருளின் படி அம்முனிவர் அவ்விலிங்கத்தணிமையில் அந்நிழல்செய்துகொண் டிருந்தனர். அதனல் அச்சம்புவிருக்ஷநிழலில் தங்கிவாழ் சிவசம்பு வென்று கூறியதென்க.

கருதிவந் திராகவன் கும்ப கன்னற்கொல்
பிரமகத் தித்துய ரொழியப் பேணிநின்
றரியவா கமமுறை பூசித் துய்ந்துநல்
வரனுற வளித்தது வழுத்து மானைக்கா. (ருங)

அரனையர்ச் சித்துப்பொன் னையன் முன்னடம்
புரியமுன் செய்ததப் பொன்ன ரங்கநேர்
மருவியெக் காலமும் வயங்கு மாசெய்மாற்
கருவர மளித்தருள் புரிந்த தானைக்கா. (ருச)

விஷ்ணு, அரனை—சம்புகேசுரரைப் பூசித்துத், தன்பத்தினியாகிய பொன்—இலக்குமியை அப்பூசாகாலந்தோறும் அவளது பரவாநடனஞ்செய்யும்படி செய்ததை அப்பொன்னின் அரங்கம் (சீரங்கம்) அச்சம்புகேசர்க்கு நேரிலிருந்து எக்காலத்திலும் விளங்கும்படியுஞ்செய்த அம்மாலுக்கு அருளிய ஆனைக்காவென்க. எனவே திருவானைக்காத்திருக்கோயிலுக்கு நேரிலுள்ள சீரங்கமானது அச்சம்புகேசுரர் திருச்சந்நிதியில் இலக்குமி செய்யும் நடனசாலை என்பதாம். சீ—இலக்குமி அரங்கம்—நடனசாலை, இதனுல் திருவானைக்காத்திருக்கோயில்,சீரங்கத்தைத் தனதுதிருத்தமண்டபமாக்கொண்டு அதன்மேலும் விரிந்துள்ளதென்பது விளக்கமாகின்றது.

(வேறு.)

இன்னன மகிமை யெல்லா மிலைபந்திலங் கானைக் காவிற்
றுன்னின னண்ட மெல்லாந் துதைதா வொருங்கின் றேம்பு
மன்னைநம் மகிலாண் டேசை யம்புயத் தாளி றைஞ்சி
முன்னமுற் றளித்தாள்கென் றுமுன்னமன்பினிற் றுதித்தான்.

அழுக்கொருங் கொழித்துத் தூய்மை யளிப்பவன் சிவனே யென்ப, முழுத்தழன் மேனி யாலுந் தெரித்தருள் முதல்வன் றன்னே, விழுத்தழ லியல்பற் றேனும் வெருவுறச் செய்தும் வெப்பம், பழுத்துறு மதனு லன்ன பாவகன் வடிவ மாற்றி. (ருசு)

நெருப்பின்குணம், தன்னில்வந்தபொருள்களின் அசுத்தம் நீக்கிச் சுத்தமான விபூதியாக்குதலேயாதலால், அத்தழன்மேனியாலும் தன்னையடைந்தார்க்கு மலவழுக்குமுற்றொழித்துத் தன்மயமாகும் நிர்மலசிவத்துவங்கொடுப்பவன் சிவனேயென்னுமுண்மையை விளக்கியருளும்முதல்வனே, அத்தழலினியல்பு அத்தன்மைத்தேனும் அணுகாது வெருவும்படி வெப்பமுதிர்வுறுமாதலால் அப்பாவகன் (அவ்வக்கினி) வடிவை நீக்கி, யாவரும் வெருவுதல் சிறிதுமின்றி யணுகும்படி சீதளஇயற்கைக்குணத்ததாய உதகத்தையே திரட்டிச் சிவலிங்கமாக்கி யுமையம்மை பூசித்தநாதனே என்று அடுத்தசெய்யுளுடனியைத்துப் பொருள்கொள்க.

சீதள வியல்பிற் றுகித் திகழுதக கந்தி ரட்டி
மாதகு மிலிங்க மாக்கி வைத்துமை யருச்சித் தேத்து
நாதனைச் சம்பு கேச நாமனைப் பூமன் காணுப்
பாதனே யிறைஞ்சி நேர்நீர் பரவுரு நோக்கி நின்று. (ருஎ)

பாவச னுகி யெந்தாய் பல்வகை யுயிர்முற் றோம்பி
யருளமு தூட்டி யாளு மமலனீ யொருவனேயென்
னுரையனு மானங் காட்சி யளவினு முறுதி செய்புந்
திருவுளக் கருத்தி னுனே திருவருள் வெள்ளமேயாம் (ருஅ)

உரை—ஆகமப்பிரமாணம். அதனை, அனுமானப்பிரமாணம் காட்சிப்பிரமாணங்களாலும் உறுதிசெய்யுங்கருத்தினாலோ, இத்திருவானைக்காவில் அத்திருவருள் வெள்ளமேயாமென்னும்படி நீர்பெருகிச் செல்லும் சிவலிங்கமேனியனாய் வீற்றிருந்தருளுகின்றாயென்று அடுத்தசெய்யுளுடனியைத்துப் பொருள்கொள்க.

ளன்னநீர் பெருகிப் பாயு மிலிங்கமே னியனா யிந்த
வின்னிமி ரானைக் காவில் விற்றிருந் தருளு கின்றா
யன்னையா யத்த னாகி யகிலமு மளித்தாள் வாய்மை [தாய்
முன்னவ வெளியே னெண்ணு முன்னமுற் றருள்வா யெங்
எளியவர்க் கெளிய னாகி யின்னருள் புரித னின்சீர்த்
தெளியரு ளியற்கை யென்றே செப்புநூல்செந்நெறிச்செல்
லளிநிறை யான்றோர் சொல்வ ராதலா லெளியே னின்பால்
0வெளிறுநீஇ யருள்கென் றோதன் மிகையெனவெருவுகின்
0 வெளிறு—வெள்ளறிவு. றேன். (சு0)

என்றரி தியம்பி மேலும் பன்முறை யிறைஞ்சி யங்கை
சென்றுதன் சிரமேற் கூம்பத் திருமுனின் றொருவா றேகித்
தன்றனி யாசி ருக்கை சார்ந்தருட் சம்பு நாதன்
மன்றலங் கழன்ம னத்து வைத்துவீற் றிருந்தான் மன்னோ.

நாடொறுந் தாயுமான நாதனை யானைக் காவி
னீடொளிர் சம்பு கேச நிமலனை நினைவு மாறாப்
பீடுறு மன்பிற் போந்து பேணியா ரருளை வேண்டிச்
சேடுறப்பணிந்துபோற்றுந் திருத்தொண்டுசெய்துவந்தான்.

இவ்வகை பன்னாட் போற்றி யிறைஞ்சுமித்கொண்டின்பேற்
றெவ்வரை யடக்கியாளுந் திறல்வலி யாதி யாவுஞ் [ருற்
செவ்விதி னுறு ளோங்கிச் செறிதல்கண் டுவகை கூர்ந்தே
யவ்விறன் மிகுசோ ணுக்க னடுசம ரூக்கஞ் சார்ந்தான்.(சுஙு

தெவ்வலி முருக்கி யெங்குஞ் செயத்தம்ப நாட்டி யாளு
மவ்விய லுறற்கி யைந்த வாற்றன்மிக் குளநன் னளிற்
பௌவநேர் படையெ ழுந்து பரந்துசூழ்ந் தேகு மாறு
செவ்விபமுறசறைந்துநிருந்துபோர்க் கோலங்கொண்டான்.

அம்புவி மாந்தர் வானத் தமரர்கண் முனிவர் முன்னோர்
பம்பிவந் திறைஞ்ச வேட்ட பலன்பெற வுடன ளிக்குஞ்
சம்புநா யகர்தண் கோலந் தாயுமா னவர்வண் கோல
நம்புளத் திருத்திக் கொண்டு நமந்துவேண்டுபுசென் றனல்.

நினைவினு முந்திச் செல்லு நிரைமணி யிரத மேற்கொண்
டுனலருஞ் சாது ரங்க முடனெழுந் தார்த்துச் சூழக்
கனையொலி முரச முன்னேழ் கடலினு நனிமு ழங்கத்
தனைநிகர்வருஞ்சோணுக்கன்சமருளமுப்பப்சென்றான்(சுகு

நன்னல ராகி யேனை நாடுவாழ் வேந்தர் யாருங்
கன்னகன் புவிசெ லிப்பக் கறித்தெழுந் தளப்பின் றாகி
விண்ணவ ரெவரு மேங்க விரிந்தநாற் படையின் வீறு[டார்.
மன்னல்போர்க்கோலத்தேறு மாற்றன்முற்பொலிவுங்கண்

ஏற்றம ரியற்று மாற்ற லிழந்துநேர் நோக்கி யிவ்வேந்
தாற்றன்மா னுடமட் டன்று ளப்பருந் தைவி கத்தாய்
மேற்றிகழ் கின்ற தென்றே வெருக்கொடு வந்து தாழ்ந்து
போற்றுபுதிறையளித்துப்பொலிவுறச்சூழ்ந்தான்றே. (சுஅ

அமர்குறித் துறுசோணுக்க னயர்செயு முன்ன ரேவெல்
சமர்வலி வீர ரெல்லாந் தளர்ந்தடி வீழ்ந்த சால்பா
லுமையொரு பாகன் றன்னை யுளங்கொளு மன்ப ராற்ற
லிமையவர் தமின்மேலோர்க்கு மெய்தரிதென்பதோர்ந்தாம்.

இவ்வகையொவ்வொர்நாட்டுமேகியாங்கெவரும் வெம்போர்
செய்வலி யிழந்து தாழ்ந்து திறையளித் துடங்கு சூழ
வவ்விய னுடெ லாந்த னடற்புலிக் கொடிநி றீஇச்சென்
றுய்வருள்சிராப்பள்ளிக்க ணுற்றனனுறுசோ ணுக்கன்.(எ௦

அத்தலத் தமலன் றன்னை யானைக்கா வமுத ரூப
நித்தனை யுடனு யெங்கு நீடருள் புரிந்த நன்றி
பத்திமிக் கெடுத்தி யம்பிப் பன்முறை பணிந்து போற்றிச்
சித்தனைத் துருகப்போந்து சிராப்பள்ளி வீற்றிருந்தான்(எக

(வேறு.)

இக்கிரம னுகிவிர லெங்கணுநி றுத்தி
மிக்கபுகழ் பெற்றுளிரவ் வேந்துவலி நோக்கி
யொக்கவரு வேந்தர்முத லோர்களுரை செய்தார்
விக்கிரம னேயிவனென் மேதகைய நாமம். (எஉ)

நாமமிகு துற்றதனி நாமவிறல் வேந்தன்
ருமவுத யப்பரிதி யிற்றிகழ்பு சார்வ
பூமனென வாழ்ந்தெனைய வேந்தர்நிரை போந்து
காமுறுதன் ஞணைவழி காவல்செய வுய்த்தான். (எங)

தனியாசி யற்றுவிறல் சார்ந்துபுரி கின்றே
மினிவழுதி நாட்டினையும் வென்றிடுது மென்றே
யுனியமரி னுக்குரிய வங்கநிரை யோடு
மனிவினைசெய் மாவிரத மேற்கொடுந டந்தான். (எச)

எத்துணைய புத்தியின ரேனுமுனை யூழ்தம்
புத்தியைம றைத்துமுன ரேகல்புரி தன்று
லத்தகைய விக்கிரம ஞவதறி யாதே
நித்தனர சாற்றியரு ணீண்மதுரை சென்றான். (எரு)

மண்ணரசர் நாடுமுயர் வானரசர் நாடு
மெண்ணரிய பற்பல்புவ னங்களுமி றைஞ்சத்
தண்ணருள்செய் சுந்தரன தாவிலரசாட்சி
நண்ணுதலி னெப்பகையு நாடரிதிந் நாடே. (எசு)

என்னுநிலை யுன்னுகிலன் யாவரையும் வென்றே
மென்னநிலை தன்னகமுன் னேவவெளி தென்றே
முன்னிவரு விக்கிரம சோழன்முது கூடன்
முன்னிமதி வேணியிறை முன்றெழுது சென்றான். (எஎ)

சீர்மதுரை வாழ்வாகு ணச்செழிய னேகி
நார்மலிமெய் யன்பர்தொழ நன்பருள்செய் கானப்
பேர்மருவி யாங்கணுறை பெற்றிதெரி வுற்றே
போர்மலைப வப்பதியி னிற்புகறு ணிந்தான். (எஅ)
அன்னபதி நோக்கியுறு காலிடையி னுங்கே
சொன்னமய கோபுரமி லங்கியெதிர் தோன்ற
நன்னர்மகிழ் வுற்றதனை நோக்குபுந டந்தே
மன்னியொளி ரந்நகருள் வந்துவள னெல்லாம். (எகூ)
கண்டதிச யித்தனைய காமருத லச்சீர்
மண்டுநல னுங்கணுறை வார்முனம்வி னவிப்
பண்டறம்வ ளர்த்தருளு மன்னையொரு பாகன்
புண்டரிக பாதமலர் போற்றுறவி ழைந்தான். (அ0)
வாலிதட மூழ்கிமுறை மாண்இலவு பூதி
தாணுவிழி காணுமணி தாரணமு னுய
பேணியன வாவிகரை பீடுபெற வாழைம்
பாணிகண நாதனருள் பாடியடி சூடி. (அக)
கோயின்முன ருற்றுமணி கோபுரம்வ ணக்கி
நேயமிக வுட்புகுபு நீடறம்வ ளர்த்த
தாயினடி யிற்றொழுது தாதைமுன டுத்துச்
சேயகம லத்தைநிகர் சேவடிசி ரத்தில். (அஉ)

புனைந்துமுன்வ னாங்குபுபு கன்றுதுதி கூறி
நனைந்துருகு மன்புமொழி நன்கிருக 0னீரி
னினந்தருபன் மஞ்சனமி லங்குபொருள் சேரத்
தனந்தவிய னென்றுரைசெய் சம்புமுடி மீது. (அரு)

0 னீரின் நனைந்துஎன்க-

ஆட்டுபுநி வேதனமு னூர்த்தவைக ளார
வூட்டியொளி தூபவகை கோட்டிபொரு வாத
நாட்டமிகு பூசனையி னூர்த்தவுள னுசித்
0தேட்டநிறை வாகமுறை தேற்றுரைசெய் வானல்.(அச

0தேட்டம்—விருப்பம். அது நிறைவுறும்படி முறையாகவிளக்கும் மொழிகளைச் சொல்லித் துதிப்பானுயினுனென்க.

சங்கரபு ராணசிவ தாணுபவ நாச
செங்கரச டேசமலை மாதுநிகழ் வாச
பங்கரபு ராரிதிரி லோசனப ரேச
பொங்கரவு சிதமதி பூணமல தேச. (அரு)

இன்னறம்வ ளர்த்தருளி யேழுலகு மோம்பு
மன்னையிட னுற்றிலக பூர்வவருள் வாகி
சன்னெனம னற்பெயர்கொ டாணுதொழு வார்க
ளன்னருற மிக்கருளு நாதபர போத. (அசு)

(வேறு.)

என்றின் னனபஃ றுதிபுகன்று ணெண்ணி யாங்குக் கானப்பேர், சென்று பூழி யனைவெல்லுந் திறம்வாய்ப் புறு யோ வென்றிபம்பி, நின்ற காலை நாடெல்லா நேர்ந்த பொ ழுதே தாழ்ந்திறைஞ்ச, வென்ற நின்பே ராற்றலையெம் விறலை மறந்த தென்வேந்த. (அஎ)

நீங்கா திருப்ப யாங்களுநின் நிறைநாற் படைகள் சூழ்ந் திருப்பப், பாங்கோர் துணையும் வேண்டாதெப் பகையுங் கடக்கு நீயிவ்வா, றிங்கோர் வழுதி தனைவேற லெய்து மோ வென் றையுறனின், ஞெங்காற் றலினுங் கழகோவென் றுரைத்தார் செருக்கார்ந் துறுமமைச்சர். (அஅ)

சுருதி முதன்மை புகல்சோம சுந்த ரேசற் குரித்தேயிவ் வாசும் பொருளுஞ் சுதந்தரமோ ரணுவு நமக்கின் றெனும் வாய்மை, கருதி யாவு மவன்பணிக்கே கவினச் செலுத்தி யாசியலுக், குரிய படையா றியசிலவே யுறவைத் தாளும் வாகுணன்சீர். (அகூ)

அனையன் பெயரும் விளக்கவுமோ ராம லந்தோவிக்கிர மன், வினையின் வலிபாற் படைசூழ விமல னருள்கூர் கானப் பேர், தனையன் றடுத்துப் போர்முரசஞ் சாற்றி யேற்று னஃதுணார்ந்து, புனித வழுதி காளிசர் பொற்று ளிறைஞ்சி யிதுபுகலும். (கூ0)

ஐய நினதா ருருள்வலியே யலக்க ணனைத்து மகற்றிநலஞ்
செய்யு மென்ப கடைப்பிடித்துச் சிலவே படையா றியகொ
ண்டு, வைய மோம்புன் னடியேற்கு மாருப்ச்சோழன் விக்
கிரமன், வெப்ப போர்செய் தெனைவெல்வான் மேவி ளு
னென் செய்கேன்யான். (சுக)

அருளா யெந்தா யென்றிறைஞ்சு மரசை நோக்கிக் கா
ளீசநிருனீத் தெமையே போற்றியொரா றின்ப நுகர்மெய்
யன்புடையாய், வெருளா தேற்றுங் கமர்புரிதி வென்றி
தருது மென்றருள, வொருவா வுவகை யீர்ப்பவரு ளுந்தப்
போந்தா னுபர்வழுதி. (சுஉ)

அனைய வழுதி யமர்புரிவா னடுப்ப வதன்மு னருளாலப்
புனித நகர்வாழ் காளியவண் போந்து சோழ னமர்பாடி
தனிலெங் கனும்வாள் நிரைசூழ்ந்து சார்தற் கரிய வாளுக
நனிநிக்குறுதல்கண்டதன்மேனடந்தாளனைபவாளெல்லாம்.
பூளி யாய்த்தப் பூழிநெறிப் போந்து வழுதி யெத்திறல
பாழி வீர ரினுந்திறன்மீப் படைத்த சோழ னுடனமர்த்து
வாழி வெற்றி புனைந்தானம் மான்பி னுலோ பூழியனென்
ருழி நிலம்போற் றரும்பெயரு மடுத்தா னந்த வாகுணனே.

எல்லாஞ் சிவனு லாவனவே யெமக்கோர் செயலின்
றெனும்வாயோர், தல்லார் கண்ட னடிபேபோற் றன்பர்
பொருளா றிபசார்பொன், றில்லா ரெளிய ரெனவேறற் கெ
ண்ணி யிகலும் பேதைபரிச், சொல்லார் வழுதி யருள்வலி
முன் சோழன் வலிமாய் வோர்ந்தொதுங்க. (சுரு)

இன்ன நிலைமை வரகுணனுஞ் சென் முன்னின் றருளி யல்போர்; 0தன்ன முந்தே ருதந்தோ தரு†பலாதி யில் லெளிய,வென்ன முன்னி யேற்றுடைந்தோ மிவனண் புற லேயெமக் கென்று, மன்ன ரனைத்துந் தருவதெனை நாடித் துணிந்தான் முன்னலத்தான். (கூசு)

0 தன்னம்—அற்பம். † பலாதியில்—சைனிபமுதலியவற்றில்.

துணிந்த சோழன் வரகுணப்பேர்த் தோன்ற லின்னே டமராற்ற, வணைந்தி லேனின் றிறநோக்கண் டணங்கே யா மென் புதல்வியைநீ, மணந்து கோடற் கேயீண்டு வந்தே னவ்வா றென்கருத்துக், கிணங்கி யருள்க வெனச்சிலரை யெய்தி யுரைப்பா னியக்கினனால். (கூஎ)

(வேறு.)

அதுவின விபசிர் வரகுண வழுதி யவனுள மகிழ்வே யனையன், புதல்வியை மணத்தற் 0கோம்படை தெரிப்பப் போந்துவிக் கிரமனுங்கெய்தி,வதுவரற் குரிய சுபதினத்தெம் மான் மலிபருள் வயங்குகா னப்பேர்ப், பதியினூன் முறை யிற் றன்மக டனையப் பாண்டியற் களித்துள மகிழ்ந்தான்.

0ஓம்படை—சம்மதம்.

திருவரு ளிறைவிற் பெருகுமெய் யன்பாற் செயற்க ருஞ்செயல்பல திகழப், புரிபுல கியல்விண்டதீதனுப் வாழும் பூழியன் செயறெரிந் துந்தன், னருமைமன் மகளை யவன் கொள வளித்தா னவளுமப் பதிநிலை யடையக், கருதியோ தானக் கெளரிய மணியின் கதிரின லகவிருள் கடிந்து (கூகூ

0 அப்பதிநிலை—அந்நாயகனது நிலைமை. சிவத்துவநிலையெனினு மாம். தான், அந்தெளரியமணி — (வரகுண) பாண்டியரத்தினத்தின் ஒளியால் இருள்கடிந்து...பேரின்புறக் கருதிபோ, தன்மகள்மணி அவ்வரகுணமணியைப் பொருந்தி...வாழும்படி அளித்த விக்கிரமன் என அடுத்த செய்யுளுடன்சேர்த்துப் பொருள்கொள்க.

புனிதவத் துவிதப்பொருடெரிந் தணைந்துபோக்கில்பே ரின்புறக் குறித்தோ, புனிதவன் சுதந்த தேசிகா மத்தன் புதல்வியென் றுரையொளி மணிபப், புனிதமெய் நிலைய வர குண மணியைப் பொருந்தினின் றுலகெலாம் போற்று, புனிதவாழ் வுறுவானளித்தவிக் கிரமன்புகலரு மகிழ்வுறீஇப் பொலிந்தான். (க௦௦)

இத்திரு நலனெய் துறநமக் களித்த நீற்றினும் போற் றிய தலமீ,தெந்தலங் களினுஞ் சிறந்ததா மெனவே யெண் ணுபு மீண்டுமிங் கெய்தி, யத்தனை யொருவ தறம்வளர்த் தருளு மன்னையை யன்புமீ தூர, நித்தலு மிறைஞ்சு நியம முன் னுக நிலவுநற் றொண்டுசெய் திருந்தான். (க௦க)

தூயதொண் டாற்றி யனையவிக் கிரமச் சோழன்விற் றிருந்தவத் தொடர்பான், மேயது சோழ புரமெனும் பெயர் 0முன் விசயமா புரப்பெய ருடன்சீர், வாயவிச் சோழ புரப் பெருமகிமை வரம்பில பற்பல மல்கு, மேயுநவ் வெல்லா மியம்பரி தொருவா றிசைத்தவை கொண்டுதேர்ந் திடுக.()

0 முன்னுள்ள விசயபுரமென்னும் பெயருடன் சோழபுரமெனும் பெயர்மேயதெனக.

என்றுரை செய்தான் சூதமா முனிவ னெதிர்பணிந் திருந்துகேட் டுவகை,துன்றிய சவுன காதிய ரனைய சூதனம் புயபதத் துணைதாழ்ந்,தின்றுட லெடுத்த பயன்முழு தடைந்தோ மெந்தையித் திருத்தலத் தெளியேஞ், சென்றுநே ரிறைஞ்சும் வேட்கையிக் கெழுந்து செல்கின்ற தருள்கெனத் தெரித்தார். (கOங)

அதுதெரி சூத னனிமகிழ்ந் தனைய வருந்தவப் பெருந் தகை யன்பர், துதிபுரிந் துடன்சூழ் தாவெழீஇ நெறியிற் றுதைதலம் பலதொழு தேகி,நதிகளிற் சிறந்து தமிழ்நலன் விளக்கி நான்மறைச் சிரத்தெளி வாகிக், கதிதரு சைவ மேன்மைநே ரெவர்க்குங் காட்டுசீர் வைகைநேர் கண்டான்கOச

அனைவரு நான முறைபடிந் தேறி யாலவா யுட்புகுந் தைங்கை, முனைவனைக் கயற்க ணன்னையை முன்னர் முனைத் தருள் சோமசுந் தரனை,யினிதடி யிறைஞ்சிக் கனிதுதி புகன் றங் கேகியிச் சோழமா புரத்தி, னனிபெரு கார்வ முந்தவந் தடுத்தார் நாமகள் வாவியிற் றோய்ந்தார். (சOரு)

பொற்றிருக் கோயில் புகுந்துநந் தீசன் புகர்முகன் சேயறம் வளர்த்தாண், முற்றருள் வாகீ சுரர்திரு முன்னர் முறைபணிந் தனையபொற் கோயி, லுற்றபல் வளங்க ணகரினு மாங்காங் கொளிர்தரு வளனெலாங் கண்டார், கற்றவர் பரவு முனிவர்பே ரின்பக் கடற்படிந் தொருங்குளங் களித்தார். (கOசு)

யாவருஞ் சூத முனிவனை யிறைஞ்சி யென்னைநீ யித்
தல மகிமை, யாவயி னுரைத்தாய் முகமனே னெனமு னைய
முற் றனம்பிழை யடைந்தோ, நீவிரித் துரையவ் வளவும்
போ தாவென் னிலைமைதேர்ந் தனமெலா நேர்கண், டோ
வில்பல் வளங்கூ ரிப்பெருந் தலச்சீ ருரைப்பரி துண்மை
யென் றுரைத்தார். (௧௦௭)

மேலும்வா கீசர்ப் பணிந்திருந் தனர்பின் மேவினர்
நைமிச விபின, மேலுமித் தலச்சீ ரின்னும்பற் பலவா மித்
தகு புராணமோர் படலம், வாலிப கவிகள் பலசில வேனும்
வயங்குற நியதியின் வழுத்துஞ், சிலமெய் யன்ப ரின்ப
மெய்ஞ்ஞானச் செல்வராய் வாழ்குவர் திண்ணம். (௧௦௮)

அறம்வளர்த் தருளு மன்னைவா கீச ரருணிலை வாழியக்
கோயின், முறைமைமூன் றங்க பூசனை வாழி முதுதிருப்
பணிமுத லாய,திறநலன் வளரப் பரம்பரை முறையிற் செய்
யுமெய் யன்பர்கள் வாழி, நிறையருள் பெருநன் னெறிநிலை
வாய்மை நிகழ்த்துமிப் புராணம்வா ழியவே. (௧௦௯)

---

ஆகத் திருவிருத்தம் ௫௨௫.
சோழபுர புராணம் முற்றுப்பெற்றது.



# பிழைதிருத்தம்.

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௬ | ௧௨ | ௫ | தானுந் | தானும் |
| ௮ | ௧௫ | ௩ | கின்னாட் | கிந்நாட் |
| ௨௬ | ௩௫ | ௩ | சாய் | சாய்ந் |
| ௩௰ | ௬ | ௨ | தெமக்கிண் | தெமக்கீண் |
| ௩௨ | ௧௩ | ௪ | விரிபும் | விரியும். |
| ௩௩ | ௨௰ | ௨ | லுருநனி | னுருநனி |
| ௪௨ | ௫௪ | ௨ | தரமேவு | தாமேவு |
| ௪௫ | ௬௬ | ௧ | மெனுவிக | மெனும்விக |
| ௪௮ | ௬ | ௩ | துய்தத் | துய்தற் |
| ௭௨ | ௧௫ | ௩ | நலனெ | னலனெ |
| ௭௭ | | ௩ | நீங்கி | நீக்கி |
| ஷை | ௩௧ | ௨ | மகிழன | மகிழ்ந |
| ஷை. | ௩௨ | ௩ | நெடிதா | னெடிதா |
| ௭௯ | ௩௯ | ௭ | மறைக்ரா | மறைக்கா |
| ௮௨ | ௪௮ | ௮ | வழிகளும் | விழிகளும் |
| ௮௩ | ௫௰ | ௨ | யழைத்தவொ | யழைத்தலொ |
| ஷை | ௫௧ | ௪ | வியம்பு | யியம்பு |
| ௮௪ | ௫௨ | ௧௰ | போதகமாம் | போதகம்-அபிஷேகித் |
| ௮௫ | ௫௪ | ௩ | மக்சுதை | மக்கதை [தலுமாம் |
| ௮௬ | | ௧ | யினவாய | யினவாய் |
| ஷை | ௫௬ | ௭ | தானத் | தாளத் |
| ௮௭ | | ௨ | யுஞ்ரய | யுஞ்சய |

# பிழை திருத்தம்.

| பக்கம் | பாட்டு | வரி. | பிழை | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௮௯ | ௯௩ | ௧ | பிறர்கரி | பிறர்க்கரி |
| ௯௦ | ௯௯ | ௨ | திகழகள் | திதழ்கள் |
| ௯௧ | ௯௮ | ௨ | கரிமுகனே | கரிமுகனே |
| ஷை | ஷை | ௪ | ததுவு | ததுவும் |
| ஷை | ஷை | ௫ | பரற | பாற |
| ஷை | ௯௯ | ௧௧ | பிவிறயில் | பிறவியில் |
| ௯௩ | ௭௫ | ௪ | வீடு | வீடு |
| ௯௪ | ௮௦ | ௪ | வழச்கும் | வழங்கும் |
| ௯௯ | ௪ | ௪ | வாயக் | வாய்க் |
| ௯௯ | ௧௪ | ௩ | மிருத்தி | மிருத்திக் |
| ௧௦௨ | ௨௭ | ௩ | மாபிற் | மரபிற் |
| ௧௦௯ | ௪௦ | ௯ | னேவுன் | னேயுன் |
| ௧௧௦ | | ௧ | அருளொலி | அருளொளி |
| ௧௨௨ | ௨ | ௩ | புறீ இச் | புறீ இப் |
| ஷை | ௩ | ௧ | யொரீ | யொரீ இ |
| ௧௨௫ | ௧௪ | ௩ | திரம் | திறம் |
| ஷை | ௧௯ | ௩ | துமை | லுமை |
| ௧௩௫ | ௬௩ | ௧ | கேர்தணு | கோதணு |
| ஷை | ஷை | ௪ | பெருகு | பெருகு |
| ௧௩௮ | ௫௨ | ௧ | அம்பு | சம்பு |
| ௧௪௨ | ௯௪ | ௪ | முறச | முரச |
| ௧௪௭ | ௮௭ | ௧ | ணெண்ணி | னெண்ணி |

உ

# இந்நூலாசிரியர் செய்த நூல்கள்.

முன்வேதாந்தத்தெளிவிலும், பின்பு திருத்தொண்டர் புராணசார விளக்கத்திலும் காட்டியுள்ள நூல்கள் ... ... ௮௮.

## அவற்றின் பின்புசெய்த நூல்கள்.

அளகாபுரி மீனாக்ஷிசுந்தரேசர் திருவிரட்டைமணிமாலை ௧
போக்கலைச்செல்வவிநாயகர் பதிகம் ... ... ௧
ஷை வள்ளிமணவாளர் திருவூசல் ... ... ௧
ஷை குமரேசர் சோடசமாலை .... ... ௧
மன்னுதைவிகவிபலின்னிசைத்தமிழ்மொழி ... ௧
வேதாந்த வியல் ... ... ... ௧
கோபிசந்தன வரலாறு ... ... ... ௧
சிவாலயபூசாங்க ஆசீர்வாதமுறை ... ... ௧
உண்மை நோக்கம் ... ... .... ௧
சோழபுர புராணம் (பாட்டு ௫௨௫) .... ... ௧
சிவநாமவணக்கம் (பாட்டு ௬௨) ... ... ௧
சிவதயைவணக்கம் (பாட்டு ௧௦௮) ... ... ௧
விண்ணப்பமாலை. ... .... ... ௧

ஆகப்பிரபந்தங்கள் ௧௦௧.